පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉතිහාසය I (I කොටස)
வரலாறு I (பகுதி I)
History I (Part I)

25 T I

26.08.2019 / 1300 – 1610

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

## இலங்கை வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1978 வரை

சுட்டெண் : ..............................

**அறிவுறுத்தல்கள்:**

※ இப்பகுதியில் **40** வினாக்கள் உள்ளன. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாப்பத்திரத்திலேயே** விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினாவுக்கும் **ஐந்து** தெரிவுகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** மட்டுமே சரியானது. சரியான விடையைத் தெரிவுசெய்து, குறிப்பிடப்பட்ட **அறிவுறுத்தல்களுக்கமைய உமது விடையைக்** குறிப்பிடுக.

※ இப்பகுதிக்கு **40** புள்ளிகள் வழங்கப்படும்.

※ **இரண்டு** பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலங்களாகும்.** விடைகளை எழுதிய பின்னர், **பகுதி I** இன் விடைத்தாள்களை **பகுதி II** இற்கான விடைத்தாள்களுடன் **இணைத்துக் கைமளிக்குக.**

## பகுதி I

● **1** தொடக்கம் **5** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ ஒரு காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**1.** (1) மகாதித்த (2) கோகண்ணதித்த (3) சுகரதித்த
(4) கச்சகதித்த (5) காலதித்த (.........)

**2.** (1) வம்சத்தப்பகாசினி (2) சமந்தபாஸாதிக (3) மனோரதபூரணீ
(4) சம்மோகவினோதணீ (5) சுமங்கலவிலாசினீ (.........)

**3.** (1) உபோசதகர (2) ஜந்தாகர (3) பிரதிமாகர
(4) போதிகர (5) சூதிகர (.........)

**4.** (1) அப்போன்ஸோ (2) அல்மெய்டா (3) றிச்சர்ட்
(4) சில்வா (5) பெர்னாண்டோ (.........)

**5.** (1) அண்ட்ரூ கோல்டிகொற் (2) ஹென்றி மொங் மேசன் மூர் (3) சோல்பரி
(4) ஒலிவர் குணதிலக (5) வில்லியம் கோபல்லவ (.........)

● **6** தொடக்கம் **10** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிகள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ளவை ஒன்றுடன் ஒன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**6.** (1) அபயவாபி - திஸ்ஸ வாவி
(2) மணிகிரவாபி - மின்னேரியா வாவி
(3) கானவாபி - மஹாகணதரா வாவி
(4) பட்டபாசானவாபி - நாச்சதூவ வாவி
(5) கங்காதடாகவாபி - கந்தளாய் வாவி (.........)

**7.** (1) இராசரட்டை - பொலன்னறுவை
(2) தக்கிணதேசம் - புங்ககாம
(3) தொளஸ்தஹஸ்ரட்ட - மகாநாகஹுல
(4) அட்டதஹஸ்ரட்ட - உடுந்தொற
(5) மாயரட்டை - மஹியங்கனை (.........)

**8.** (1) வீரசோழியம் - தமிழ் இலக்கண நூல்
(2) அத்தவனகல்ல விகார வம்சம் - ஹத்திகுச்சி விகாரையின் வம்சக் கதைகள்
(3) கந்தவுரு சிரித - தம்பதெனிய யுகத்தின் மன்னர்களின் நாளாந்த வாழ்க்கை பற்றிய குறிப்புகள்
(4) சரசோதிமாலை - சோதிடம் பற்றிய தமிழ் நூல்
(5) நிகாய சங்கிரக - சாசன வரலாறு பற்றிய ஒரு படைப்பு (.........)

**9.** (1) தர்மபால - டொம் ஜுவான்
(2) யமசிங்க பண்டார - டொம் பிலிப்
(3) நிக்கபிட்டிய பண்டார - டொம் மனுவல்
(4) குசுமாசன தேவி - தோனா கதரினா
(5) கோணப்பு பண்டார - ஆஸ்திரியாவின் டொம் ஜுவான் (.........)

**10.** (1) நட்சத்திரக் கோட்டை - மாத்தறை
(2) மக்டொவல் கோட்டை - மாத்தளை
(3) மக்டொனல்ட் கோட்டை - பதுளை
(4) பிரட்றிக் கோட்டை - காலி
(5) ஒஸ்ரன்பேர்க் கோட்டை - திருகோணமலை (.........)

● **11** தொடக்கம் **15** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் சில பெயர்கள் / கூற்றுகள் / திகதிகளின் தொகுதிகள் **X, Y** என்னும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோவொரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடரொழுங்கில் **தரப்படவில்லை. Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுக்கேற்ப சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். சரியான அச்சேர்மானத்தின் **இலக்கத்தைத் தெரிவுசெய்து அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**11.**

| X | Y |
|---|---|
| (i) எல்லாளன் | A கித்துவரகல் |
| (ii) வலகம்பா | B திகஜந்து |
| (iii) தாதுசேனன் | C சல |
| (iv) முதலாம் விஜயபாகு | D மிகர |
| (v) முதலாம் பராக்கிரமபாகு | E கபிசீச |

(1) AECDB (2) BEDCA (3) CEBAD (4) DAECB (5) EBDAC (.........)

**12.**

| X | Y |
|---|---|
| (i) சாரார்தசங்கிரக | A ஐந்தாம் காசியப்பன் |
| (ii) ஜானகீகரண | B இரண்டாம் பராக்கிரமபாகு |
| (iii) தம்பியா அடுவா ஹடபதய | C நான்காம் சேன |
| (iv) சியபஸ்லாகர | D குமாரதாதுசேன |
| (v) கவிசிலுமின | E புத்ததாச |

(1) BACED (2) DAEBC (3) ECABD (4) EDACB (5) EDCAB (.........)

**13.**

| | X | | Y |
|---|---|---|---|
| (i) | உயர்நீதிமன்றம் தாபிக்கப்படல் | A | ஹேர்க்குலிஸ் றொபின்சன் |
| (ii) | கொழும்பு - கண்டி வீதி கட்டுமானம் | B | ஹென்றி மக்கலம் |
| (iii) | மாநகர சபைகள் தாபிக்கப்படல் | C | வில்லியம் மனிங் |
| (iv) | விவசாயத் திணைக்களம் தாபிக்கப்படல் | D | பிரட்றிக் நோர்த் |
| (v) | பல்கலைக்கழகக் கல்லூரி தாபிக்கப்படல் | E | எட்வேட் பாண்ஸ் |

(1) BAECD (2) CEABD (3) CEADB (4) DEABC (5) ECDBA (.........)

**14.**

| | X | | Y |
|---|---|---|---|
| (i) | அலெக்சாந்தர் ஜோன்ஸ்ரன் | A | கண்டிய பிரதேசங்களின் வதிவாளர் |
| (ii) | ஜோன் டீ ஒயிலி | B | குடியேற்ற நாட்டுச் செயலாளர் |
| (iii) | ஜோர்ஜ் ரேணர் | C | தொல்லியல் ஆணையாளர் |
| (iv) | எமர்சன் ரெனண்ற் | D | மத்திய மாகாணத்தின் முதலாவது அரசாங்க அதிபர் |
| (v) | எச். சி. பி. பெல் | E | பிரதம நீதியரசர் |

(1) ADCEB (2) DEBAC (3) EADBC (4) EBACD (5) EDACB (.........)

**15.**

| | X | | Y |
|---|---|---|---|
| (i) | ஏ. எவ். மொலமுறே | A | பிரதிநிதிகள் சபையின் முதலாவது தலைவர் |
| (ii) | டி. பி. ஜெயதிலக | B | நிறைவேற்றதிகாரம் கொண்ட முதலாவது ஜனாதிபதி |
| (iii) | டி. எஸ். சேனனாயக்க | C | முதலாவது எதிர்க்கட்சித் தலைவர் |
| (iv) | என். எம். பெரேரா | D | முதலாவது பிரதம மந்திரி |
| (v) | ஜே. ஆர். ஜெயவர்த்தன | E | முதலாவது சபாநாயகர் |

(1) BEACD (2) CAEDB (3) CEABD (4) EADBC (5) EADCB (.........)

● **16** தொடக்கம் **20** வரையுள்ள ஒவ்வொரு வினாவினதும் சரியான விடையைத் தெரிவு செய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**16.** **பின்வருவனவற்றுள் இலங்கையின் புராதன மன்னர்களின் சரியான கால ஒழுங்குவரிசையைக் கொண்டுள்ள தெரிவு எது?**
(1) விஜயன், பண்டுவாசுதேவன், உபதிஸ்ஸ, பண்டுகாபயன், மூத்தசிவன்
(2) விஜயன், பண்டுவாசுதேவன், பண்டுகாபயன், உபதிஸ்ஸ, மூத்தசிவன்
(3) விஜயன், உபதிஸ்ஸ, பண்டுவாசுதேவன், பண்டுகாபயன், மூத்தசிவன்
(4) விஜயன், உபதிஸ்ஸ, பண்டுகாபயன், பண்டுவாசுதேவன், மூத்தசிவன்
(5) உபதிஸ்ஸ, விஜயன், பண்டுவாசுதேவன், மூத்தசிவன், பண்டுகாபயன் (.........)

**17.** **பின்வருவனவற்றுள் அநுராதபுரத்தில் அமைந்துள்ள தூபிகளில் அவை கட்டப்பட்ட மன்னராட்சியின் கால ஒழுங்குவரிசையில் உள்ள தெரிவு எது?**
(1) தூபாராம, அபயகிரி, ருவன்வலிசாய, ஜேதவன
(2) தூபாராம, ருவான்வலிசாய, அபயகிரி, ஜேதவன
(3) தூபாராம, ருவான்வலிசாய, ஜேதவன, அபயகிரி
(4) தூபாராம, அபயகிரி, ஜேதவன, ருவன்வலிசாய
(5) ருவன்வலிசாய, தூபாராம, அபயகிரி, ஜேதவன (.........)

**18.** **பின்வருவனவற்றுள் பொலன்னறுவை காலப்பகுதியில் ஆக்கப்பட்ட இலக்கியப் படைப்புகளைக் கொண்டுள்ள தெரிவு எது?**
(1) சசதாவத, தர்மபிரதீபிகா, அமாவதுர, புத்சரண
(2) சசதாவத, தர்மபிரதீபிகா, பூஜாவலிய, அமாவதுர
(3) சசதாவத, சத்தர்மரத்னாவலிய, அமாவதுர, புத்சரண
(4) தர்மபிரதீபிகா, சத்தர்மரத்னாவலிய, பூஜாவலிய, புத்சரண
(5) சசதாவத, சத்தர்மலங்கார, சத்தர்மரத்னாவலிய, புத்சரண (.........)

**19.** **பின்வருவனவற்றுள் இலங்கையில் இருந்த போர்த்துகேய பிரதம தளபதிகளின் பெயர்களைக் கொண்டுள்ள பட்டியல் எது?**
(1) ஜோவோ ரிபெய்ரா, பெட்ரோலொபெஸ் டீ சூசா, ஜெரனிமோ டீ அசிவிடோ, டீயாகோ டீ மெல்லோ டீ கஸ்ரோ
(2) ஜெரனிமோ டீ அசிவிடோ, கொன்ஸ்ரான்ரினோ டீ சூசா டீ நொறன்கா, டியாகோ டீ மெல்லோ டீ கஸ்ரோ, டிகோடி கூட்டோ
(3) ஜெறோனிமோ டீ அசிவிடோ, ஜோவோ டீ பர்ரோஸ், பெட்ரோ லோபெஸ் டீ சூசா, ஜோவோ ரிபெய்ரோ
(4) பெட்ரொ லொபெஸ் டீ சூசா, ஜெரோனிமோ டீ அசிவிடோ, கொன்ஸ்ரான்ரினோ டீ சூசா டீ நொறன்கா, ஜோவோ ரிபைரோ
(5) பெட்ரொ லொபெஸ் டீ சூசா, ஜெறோனிமோ டீ அசிவிடோ, கொன்ஸ்ரான்ரினோ டீ சூசா டீ நொறன்கா, தியாகோ டி மெலோ டீகஸ்ரோ (.........)

[பக். 4 ஐப் பார்க்க

**20.** **பின்வருவனவற்றுள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிரித்தானியரால் உருவாக்கப்பட்ட மாகாணங்களை சரியான கால வரிசைக்கிரமத்தில் கொண்ட தெரிவு எது?**

(1) வடமேல், மத்திய, வடமத்திய, ஊவா, சப்பிரகமுவ
(2) மத்திய, வடமத்திய, வடமேல், சப்பிரகமுவ, ஊவா
(3) வடமத்திய, வடமேல், மத்திய, ஊவா, சப்பிரகமுவ
(4) மத்திய, வடமேல், வடமத்திய, ஊவா, சப்பிரகமுவ
(5) மத்திய, சப்பிரகமுவ, வடமத்திய, வடமேல், ஊவா (.........)

● **21** தொடக்கம் **25** வரையான ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று **உரிய தலைப்பிற்குப் பொருந்தாதுள்ளது.** அதனைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**21.** **அனுராதபுரக் காலத்தில் அரசின் வருமானம்**

(1) காணி வரியே பிரதான வருமான மூலமாக இருந்தது.
(2) அனுராதபுரக் காலத்தின் ஆரம்பத்தில் காணி வரி போஜகபதி என்ற பெயரால் குறிப்பிடப்பட்டது.
(3) நீர் வரி தகபதி எனப்பட்டது.
(4) துறைமுகங்களில் அறவிடப்பட்ட சுங்கவரி அரசின் இன்னுமொரு வருமான மூலமாக இருந்தது.
(5) விகாரைக் காணிகளுக்கும் அரச வரி அறவிடப்பட்டது. (.........)

**22.** **சிகிரியா**

(1) முதலாம் காசியப்பனின் நிர்வாக மத்திய நிலையமாக சிகிரியா காணப்பட்டது.
(2) முதலாம் காசியப்பன் சிகிரியாவில் இரண்டாவது அளகாபுரியை அமைத்து (அலகமண்ட), அங்கே குபேரனைப் போல வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது.
(3) காசியப்பனுக்குப் பின்னர் முதலாவது முகலன் சிறிதுகாலம் சிகிரியாவைத் தனது தலைநகராக்கிக் கொண்டான்.
(4) சிகிரியா ஓவியங்களில் உள்ள பெண் உருவங்கள் மின்னல்களையும் முகில்களையும் சித்திரிப்பதாக பேராசிரியர் பரணவிதான தர்க்கிக்கின்றார்.
(5) சிகிரியாவின் நீர் நந்தவனம் பண்டைய இலங்கையில் நந்தவனங்கள் அமைக்கும் துறையின் தனித்துவமான சாதனையாகும். (.........)

**23.** **குருணாகல் காலப்பகுதி**

(1) இரண்டாம் புவனேகபாகு குருணாகலையைத் தனது தலைநகராக அமைத்துக்கொண்டான்.
(2) கி.பி. 1302 இல் நான்காம் பராக்கிரமபாகு அரச பதவியைப் பெற்றான்.
(3) குருணாகலையில் ஆட்சி புரிந்த மிக முக்கியமான ஆட்சியாளனாக நான்காம் பராக்கிரமபாகு விளங்குகின்றான்.
(4) குருநாகல் காலப்பகுதியில் 'பன்சிய பனஸ் ஜாதக பொத' எழுதப்பட்டது.
(5) எம்பக்க தேவாலயத்தில் உள்ள மரச்சிற்பங்கள் குருணாகல் காலப்பகுதிக்கு உரியவையாகும். (.........)

**24.** **பதினெட்டாம் நூற்றாண்டின் இரண்டாம் அரைப்பகுதியில் கண்டி இராச்சியத்தில் ஏற்பட்ட பௌத்த மறுமலர்ச்சி**

(1) கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கனின் ஆதரவில் இந்த மறுமலர்ச்சி ஏற்பட்டது.
(2) பௌத்த சமயத்தின் உயர் மதச்சடங்குகள் (உபசம்பத) மீளமைக்கப்பட்டன.
(3) அமரபுர நிகாய தாபிக்கப்பட்டது.
(4) வலிவிற்ற சரணங்கர தேரருக்கு சங்கராஜ விருது வழங்கப்பட்டது.
(5) வருடாந்தம் தெய்வங்களுக்காக நடாத்தப்படும் அசல பெரகரா நிகழ்வுகளில் தலதா பெரகராவும் அறிமுகம் செய்யப்பட்டது. (.........)

**25.** **பத்தொன்பதாம் நூற்றாண்டின் பெருந்தோட்டப் பயிர்ச்செய்கை**

(1) ஜோர்ஜ் பேட்டினால் சிங்கபிட்டியாவில் முதலாவது கோப்பிப் பயிர்ச்செய்கை ஆரம்பிக்கப்பட்டது.
(2) கோப்பிப் பயிர்ச்செய்கையின் வீழ்ச்சியின் பின்னர் சிங்கோனா பயிர்ச்செய்கை அறிமுகப்படுத்தப்பட்டது.
(3) உள்ளூர் செல்வந்தர்களால் தெங்குப் பயிர்ச்செய்கை பெருமளவில் மேற்கொள்ளப்பட்டது.
(4) லூல்கந்துரவில் ஜேம்ஸ் ரெயிலரினால் தேயிலைப் பயிர்செய்கை ஆரம்பிக்கப்பட்டது.
(5) இறப்பர், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதித் தசாப்தங்களில் நாட்டின் பாரிய ஏற்றுமதிப் பண்டமாகக் காணப்பட்டது. (.........)

[பக். 5 ஐப் பார்க்க

2867

- **26** தொடக்கம் **30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு தெரிவுகள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் **ஒன்று** அல்லது **பல** சரியான விடையாகும். சரியான விடை அல்லது விடைகளைத் தெரிவுசெய்து,

**(A)** யும் **(B)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **1** எனவும்
**(A)** யும் **(C)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **2** எனவும்
**(B)** யும் **(C)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **3** எனவும்
**(C)** யும் **(D)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **4** எனவும்
**வேறு விடைகளின்** எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரியாயின் ......... **5** எனவும்

**அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மாத்திரம் சரி | **(A)** யும் **(C)** யும் மாத்திரம் சரி | **(B)** யும் **(C)** யும் மாத்திரம் சரி | **(C)** யும் **(D)** யும் மாத்திரம் சரி | **வேறு விடைகளின்** எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரி |

**26.** பண்டைய இலங்கையில் தென்னிந்திய படையெடுப்புகள் தொடர்பாக பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது / சரியானவை?
(A) இலங்கையானது பாண்டிய, சோழ படையெடுப்புகளுக்கு உட்பட்டிருந்தது.
(B) எல்லாளன் பாண்டிய ஆட்சியாளர் ஆவார்.
(C) சோழ படையெடுப்பின் விளைவாக அநுராதபுர இராசதானி வீழ்ச்சியடைந்தது.
(D) மாறவர்மன் சுந்தர பாண்டியன் இலங்கையைக் கைப்பற்றுவதில் வெற்றி கண்டான். (.........)

**27.** முதலாம் பராக்கிரமபாகு மன்னனின் வெளிநாட்டு உறவுகள் தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது / சரியானவை?
(A) சோழருடனான திருமண உறவுகள்
(B) சீனாவுடனான உறவுகள்
(C) பர்மா மீதான படையெடுப்பு
(D) கம்போடியாவுடனான சினேகபூர்வ உறவுகள் (.........)

**28.** கண்டி இராசதானியின் வீழ்ச்சி தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது / சரியானவை?
(A) மன்னனுக்கும் மகாதிகாரி மொல்லிகொடவுக்கும் இடையிலான பிணக்கு
(B) மன்னன் மக்களின் ஆதரவை இழந்தமை
(C) பிரித்தானியரின் சதியாலோசனைக் கொள்கை
(D) பிரித்தானியரால் மேற்கொள்ளப்பட்ட வீதி அமைப்புக்கள் (.........)

**29.** பிரித்தானியர் ஆட்சியில் பண்டைய நீர்ப்பாசனத் திட்டங்களைப் புனரமைத்தல் தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது / சரியானவை?
(A) பிரௌன்றிக், ஊறுபொக்க, கிரம ஆகிய நீர்ப்பாசனத் திட்டங்களைப் புனரமைப்புச் செய்தார்.
(B) வாட், வரண்ட வலயத்தில் பண்டைய குளங்களைப் புனரமைப்புச் செய்யும் ஒரு வேலைத்திட்டத்தை ஆரம்பித்தார்.
(C) கிரெகறி, கிராமக் குளங்களைப் புனரமைப்புச் செய்யும் வேலைதிட்டமொன்றை ஆரம்பித்தார்.
(D) கோர்டன், கலாவாவியைப் புனரமைத்தார். (.........)

**30.** சுதந்திரத்தின் பின்னர் இலங்கையில் உருவான அரசாங்க முறைமை தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது / சரியானவை?
(A) பாராளுமன்றமானது மகாதேசாதிபதி, பிரதிநிதிகள் சபை, செனெற் சபை ஆகியவற்றை உள்ளடக்கியிருந்தது.
(B) பிரதிநிதிகள் சபை 101 உறுப்பினர்களைக் கொண்டிருந்தது.
(C) மந்திரிசபை அமைச்சர்கள் அனைவரும் பிரதிநிதிகள் சபை அங்கத்தவர்களில் இருந்து தெரிவு செய்யப்பட்டனர்.
(D) 1972 இன் அரசியலமைப்புத் திட்டத்தின் மூலம் செனெற் சபை இல்லாதொழிக்கப்பட்டது. (.........)

[பக். 6 ஐப் பார்க்க

- **31** தொடக்கம் **35** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிற்கும் சரியான விடையைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

**31.** **இலங்கையின் பௌத்த சாசன வரலாற்றில் எந்த மன்னனின் ஆட்சியில் கொள்கை அடிப்படையிலான முதலாவது மதப்பிரிவினை ஏற்பட்டது?**
(1) சத்தாதிஸ்ஸ (2) வாலகம்பா (3) வோகாரிகதிஸ்ஸ
(4) கோதாபய (5) மகாசேன (.........)

**32.** **துறைமுகத்தில் வசூலிக்கப்பட்ட சுங்கத்தீர்வைகள் தொடர்பான தகவல்களைத் தரும் கல்வெட்டு எது?**
(1) வேவல்கட்டிய (2) கோபிற்றிகமு (3) கொடவாய
(4) அம்பகமுவ (5) சங்கமு விகாரை (.........)

**33.** **அரசாங்க சபையில் முதல் பெண் அங்கத்தவர் யார்?**
(1) அட்லின் மொலமுறே (2) மேரி இரட்ணம் (3) டொறின் விக்கிரமசிங்க
(4) விவியன் குணவர்த்தனா (5) குசுமா குணவர்த்தனா (.........)

**34.** **இலங்கை தேசிய காங்கிரசின் முதல் தலைவர் யார்?**
(1) பொன்னம்பலம் இராமநாதன் (2) பொன்னம்பலம் அருணாசலம் (3) மார்க்கஸ் பெர்ணாண்டோ
(4) முத்துகுமாரசுவாமி (5) ஜீ. ஜீ. பொன்னம்பலம் (.........)

**35.** **இலங்கையில் நடைமுறைப்படுத்தப்பட்ட முதலாவது பல்நோக்கு அபிவிருத்தித் திட்டம் எது?**
(1) மின்னேரியா (2) மினிப்பே (3) கல்ஓயா
(4) கலாவாவி (5) பராக்கிரம சமுத்திரம் (.........)

- **36** தொடக்கம் **40** வரையிலுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் இரண்டு வகையான கூற்றுகள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருத்தமானதைத் தெரிவு செய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறிக்குள்** எழுதுக.

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **1** | சரியானது | பிழையானது |
| **2** | சரியானது | சரியானது |
| **3** | பிழையானது | பிழையானது |
| **4** | பிழையானது | சரியானது |
| **5** | சரியானது | சரியானதாக இருப்பதுடன் **முதலாவது** கூற்றை மேலும் விபரிக்கின்றது. |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| **36.** | வோகாரிகதிஸ்ஸ மன்னன் உடற்காயங்களை தண்டனையாக வழங்குவதனை இல்லாதொழித்து கட்டளை பிறப்பித்தான். | வர்த்தகம், பண்டைய இலங்கையின் பொருளாதாரத்தில் பிரதான அம்சமாகக் காணப்பட்டது. | (.........) |
| **37.** | சுப எனும் பெயரைக்கொண்ட இராணுவப் பிரதானி ஜெயவர்தனபுர கோட்டே எனும் கோட்டையைக் கட்டினான். | சந்திரபானு எனும் சீனத்தளபதி இலங்கை மீது படையெடுத்து வீரஅளகேஸ்வர எனும் சிங்கள அரசனைச் சிறைப்பிடித்து கைதியாகச் சீனாவுக்குக் கொண்டு சென்றான். | (.........) |
| **38.** | போர்த்துகேயரால் மதமாற்றத்துக்கும் கல்விக்குமிடையில் ஏற்படுத்தப்பட்டிருந்த நெருங்கிய தொடர்பு ஒல்லாந்தரால் தொடர்ந்து முன்னெடுத்துச் செல்லப்பட்டது. | போர்த்துக்கேயரால் ஆரம்பிக்கப்பட்ட பாடசாலைகளை ஒல்லாந்தர் தாம் பொறுப்பேற்றுக் கொண்டதுடன், அவற்றுக்குப் புத்துயிரூட்டி அவற்றின் எண்ணிக்கையை அதிகரித்து தேவாலயங்களோடு இணைத்துக்கொண்டனர். | (.........) |
| **39.** | வலான சித்தார்த்த தேரர் இரத்மலானையில் பரமதம்ம சேத்திய பிரிவெனாவை ஆரம்பித்தார். | ஹிக்கடுவ ஸ்ரீ சுமங்கல தேரர், இரத்மலானை ஸ்ரீ தர்மாலோக தேரர் ஆகியோர் முறையே வித்தியோதய, வித்தியாலங்கார பிரிவெனாக்களைத் தாபித்தனர். | (.........) |
| **40.** | டி. எஸ். சேனாநாயக்கவின் மரணத்தைத் தொடர்ந்து பிரதமராக ஜோன் கொத்தலாவல பதவியேற்றார். | 1956 தொடக்கம் 1965 வரையான காலப்பகுதியில் இலங்கை அரசாங்கங்கள் அணிசேரா நாடுகளின் வெளிநாட்டுக் கொள்கைகளுக்கு மிகச் சார்பாக நடந்துகொண்டன. | (.........) |

* *

[பக். 7 ஐப் பார்க்க

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉතිහාසය I (II කොටස)
வரலாறு I (பகுதி II)
History I (Part II)

25 T I

இலங்கை வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1978 வரை

**அறிவுறுத்தல்கள் :**

✳ **முதலாம்** வினாவுக்கும் வேறு ஏதாவது **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(**முதலாம்** வினாவுக்கு விடையளிப்பதற்கு **இலங்கையின் புறவுருவப்படம்** வழங்கப்பட்டுள்ளது.)

## பகுதி II

**1.** உமக்கு வழங்கப்பட்டுள்ள புறவுருவப்படத்தில் கீழே தரப்பட்டுள்ள **இடங்கள் எல்லாவற்றையும் குறித்துப் பெயரிட்டு,** அவற்றுள் எவையேனும் **இரண்டிற்குச்** சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.

(i) கோகண்ண (ii) அநுராதபுரம்
(iii) களனி கங்கை (iv) மகியங்கனை
(v) பராக்கிரம சமுத்திரம் (vi) நல்லூர்
(vii) மட்டக்களப்பு (viii) ஊவா மாகாணம்

(சரியாகக் குறித்துப் பெயரிடப்பட்ட ஒவ்வொன்றிற்கும் **01** புள்ளியாகும். சுருக்கமான வரலாற்றுக் குறிப்பு ஒவ்வொன்றுக்கும் **05** புள்ளிகளாகும்.)

**2.** இலங்கையின் வரலாற்றை வடிவமைப்பதில் உள்ளூர் புவியியல் காரணிகள் செல்வாக்குச் செலுத்திய விதத்தைப் பின்வரும் தலைப்புகளின் கீழ் ஆராய்க.
(i) மத்திய மலைநாடு
(ii) ஆறுகளும் ஆற்றுப் பள்ளத்தாக்குகளும் (14 புள்ளிகள்)

**3.** "இலங்கையில் பௌத்த மதம் தாபிக்கப்பட்டமையானது கலாசாரத்துறையில் மட்டுமல்லாது அரசியல் அபிவிருத்தியிலும் பெருமளவு தாக்கத்தை ஏற்படுத்தியது."
(i) இலங்கையில் பௌத்த மதம் அறிமுகப்படுத்தப்பட்டபோது ஆட்சியிலிருந்த மன்னனின் பெயர் யாது? (01 புள்ளிகள்)
(ii) இலங்கையில் பிக்கு, பிக்குணி முறைமையை அறிமுகப்படுத்திய தேரர், தேரி ஆகியோரின் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)
(iii) இலங்கையில் பௌத்த மதம் பரவியமைக்கு வழிவகுத்த காரணிகளைச் சுருக்கமாக விளக்குக. (03 புள்ளிகள்)
(iv) அநுராதபுர காலப் பகுதியின் இறுதிவரை பௌத்த மதம் இலங்கையின் கலாசார, அரசியல் துறைகளிலே பெருமளவு செல்வாக்கை ஏற்படுத்திய விதத்தினைப் பகுப்பாய்வு செய்க. (08 புள்ளிகள்)

[பக். 8 ஐப் பார்க்க

**4.** "இலங்கை வரலாற்றில் முதலாம் விஜயபாகு மன்னன் பெருமை மிக்க ஆட்சியாளராகக் கருதப்படுவதற்குப் பிரதான காரணம் அந்நிய ஆட்சியிலிருந்து நாட்டை விடுதலை செய்ததுடன் நாட்டை ஒன்றுபடுத்தியமையுமாகும்." ஆராய்க. (14 புள்ளிகள்)

**5.** பொலன்னறுவை இராச்சியத்தின் வீழ்ச்சிக்கு வழிவகுத்த காரணிகளைப் பரிசீலனை செய்வதுடன் தம்பதெனிய இராச்சியத்தின் தோற்றம் பற்றியும் சுருக்கமாக ஆராய்க. (14 புள்ளிகள்)

**6.** "கண்டி ஆட்சியாளர்கள் கரையோர மாகாணங்களை ஆட்சிபுரிந்த போர்த்துக்கேயருக்கு எதிரான கொள்கையொன்றைப் பின்பற்றினர்."

(i) கண்டி இராச்சியத்தின் தாபக ஆட்சியாளராகக் கருதப்படுபவர் யார்? (01 புள்ளிகள்)

(ii) போர்த்துக்கேயரிடம் புகலிடம் பெற்ற கண்டி ஆட்சியாளரதும் அவர் புதல்வியினதும் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) போர்த்துக்கேயரை கண்டி இராச்சியத்தின் மீது படையெடுக்கத் தூண்டிய காரணங்களைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iv) போர்த்துக்கேயருக்கு எதிராகக் கண்டி ஆட்சியாளர்கள் பின்பற்றிய இராணுவக் கொள்கையை நுணுக்கமாகப் பரிசீலனை செய்க. (08 புள்ளிகள்)

**7.** கோல்புறூக் - கமெரன் குழுவினர் முன்வைத்த அரசியலமைப்பு, நிர்வாகச் சீர்திருத்தங்கள் ஆகியவற்றின் முக்கியத்துவத்தைப் பரிசீலனை செய்க. (14 புள்ளிகள்)

**8.** பின்வரும் தலைப்புகளில் 1948 தொடக்கம் 1978 வரையான காலப்பகுதியில் இலங்கையில் ஏற்பட்ட பொருளாதார அபிவிருத்தி தொடர்பாகப் பரிசீலனை செய்க.

(i) விவசாயக் குடியேற்றங்கள்

(ii) தேசிய மயமாக்கல் திட்டம்

(iii) கைத்தொழில்கள்

(14 புள்ளிகள்)

**9.** பின்வருவனவற்றில் எவையேனும் **இரண்டினது** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.

(i) அநுராதபுர காலத்து நீர்ப்பாசன முறைமை

(ii) யாழ்ப்பாண இராச்சியம்

(iii) கோட்டை காலப்பகுதியின் கலாசார அபிவிருத்தி

(iv) கரையோர மாகாணங்களில் ஒல்லாந்தரின் நிர்வாக முறைமை

(v) பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் அரைப்பகுதியில் ஏற்பட்ட இந்து, இஸ்லாமிய கலாசார மறுமலர்ச்சி

(vi) டொனமூர் அரசியலமைப்பு

(ஒவ்வொன்றுக்கும் 07 புள்ளிகள்)

* * *

AL/2019/25/T-I(OLD)

2867



OLD



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉතිහාසය I
வரலாறு I
History I

25 T

ප්‍රශ්න අංකය
வினா இல.
Question No. 1

විභාග අංකය
சுட்டெண்
Index No. ..............................



0496



පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉතිහාසය II (I කොටස)
வரலாறு II (பகுதி I)
History II (Part I)

25-A T II

23.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

இந்திய வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1206 வரை

சுட்டெண் : ..............................

**அறிவுறுத்தல்கள் :**

※ இப்பகுதி **40** வினாக்களைக் கொண்டுள்ளது. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாத்தாளிலேயே** விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினாவுக்கும் தரப்படுள்ள **ஐந்து** தெரிவுகளில் **ஒன்று** மட்டுமே சரியானது. அச்சரியான விடையைத் தெரிவுசெய்து தரப்பட்டுள்ள **அறிவுறுத்தல்களுக்கேற்ப** குறிப்பிடுக.

※ இப்பகுதிக்கு **40** புள்ளிகள் வழங்கப்படும்.

※ **இரண்டு** பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலங்களாகும்.** விடைகளை எழுதிய பின்னர், **பகுதி I** இன் விடைத்தாள்களை **பகுதி II** இன் விடைத்தாள்களுடன் **இணைத்துக் கையளிக்குக.**

## பகுதி I

● **1** தொடக்கம் **10** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோவொரு காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாதுள்ளது. பொருந்தாத** பெயரை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**1.** (1) ஹெரடோற்றஸ் (2) பிளினி (3) மெகஸ்தெனிஸ்
(4) ஜஸ்ரின் (5) ஸ்ராபோ (.........)

**2.** (1) பாருகச்சா (2) சுப்பராக (3) தாம்ரலிப்தி
(4) தேவகிரி (5) காவேரிப்பட்டினம் (.........)

**3.** (1) நர்மதா (2) கிருஸ்ணா (3) துங்கபத்திரா
(4) மகாநதி (5) கோதாவரி (.........)

**4.** (1) உஜ்ஜயினி (2) சுவர்ணகிரி (3) தக்ஷீலா
(4) கலிங்க (5) தோசாலி (.........)

**5.** (1) மேகதூதம் (2) குமாரசம்பவம் (3) முத்ரா-ராக்ஸஸ
(4) மாளவிகானிமித்ரா (5) ரிதுசம்காரம் (.........)

**6.** (1) பாக் (2) உதயகிரி (3) அஜந்தா
(4) எல்லோரா (5) ஔரங்கபாத் (.........)

**7.** (1) நாகசேன (2) அச்யுதா (3) ருத்ரதேவா
(4) மதிலா (5) வியாக்ரராஜ (.........)

**8.** (1) மாறவர்மன் (2) மகேந்திரவர்மன் (3) நரசிம்மவர்மன்
(4) பரமேஸ்வரவர்மன் (5) நந்திவர்மன் (.........)

**9.** (1) முகமத் பின் காசிம் (2) சபுக்திஜீன் (3) அல்பிருணி
(4) கஸ்னி மஹ்மூத் (5) கோரி முகமத் (.........)

**10.** (1) கர்ப்பகிருகம் (2) விமானம் (3) அந்தராளம்
(4) துவார மண்டபம் (5) இரதம் (.........)

● **11** தொடக்கம் **15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப் பெயர்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ள பெயர்கள் / கூற்றுகள் ஒன்றுடன் ஒன்று **பொருந்தாது** உள்ளன. **பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**11.** (1) சம்பா - அங்க
(2) தக்ஷீலா - கம்போஜ
(3) இந்திரபிரஸ்த - குரு
(4) மதுரா - சூரசேன
(5) வாரணாசி - காசி (.........)

**12.** (1) வம்சக் கதைகள் - இராஜதரங்கிணி
(2) நாடகம் - சகுந்தலா
(3) காவியம் - பஞ்சதந்திரம்
(4) பாடல்கள் - இரகுவம்சம்
(5) அகராதி - அமரகோஷ (.........)

**13.** (1) இராஷ்டிரகூட - முதலாம் நாகபட்ட
(2) வலபி - இரண்டாம் துருவசேன
(3) மௌகாரி - கிரகவர்மன்
(4) புஸ்யபூதி - பிரபாகரவர்த்தன
(5) கௌட - சசங்க (.........)

**14.** (1) ரூபர் - சட்லஜ்
(2) இந்திரபிரஸ்த - ஜமுனா
(3) ஹரப்பா - ராவி
(4) பாருகச்சா - நர்மதா
(5) வரங்கல் - மகாநதி (.........)

**15.** (1) சரக - குஷாண
(2) பதஞ்சலி - சுங்க
(3) தண்டின் - பல்லவர்
(4) பில்கண - சாதவாகனர்
(5) விசாகதத்த - குப்தர் (.........)

[பக். 3 ஐப் பார்க்க

● **16** தொடக்கம் **20** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் ஆகியவற்றின் தொகுதிகள் **X, Y** என்னும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கில் **தரப்படவில்லை. Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுக்கேற்ப சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். சரியான சேர்மானத்தின் **இலக்கத்தைத் தெரிவுசெய்து அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**16.**

| X | | Y | |
|---|---|---|---|
| (i) | பரமேஸ்வரன் | A | முதலாம் இராஜராஜன் |
| (ii) | மதுரைகொண்டான் | B | ஹர்ஷவர்த்தனன் |
| (iii) | மும்முடிச் சோழதேவன் | C | இரண்டாம் புலிகேசி |
| (iv) | வாதாபி கொண்டான் | D | முதலாம் பராந்தகன் |
| (v) | சகல உத்தராபதநாதன் | E | முதலாம் நரசிம்மவர்மன் |

(1) ADCBE (2) CADEB (3) CDAEB (4) DCAEB (5) EDBAC (.........)

**17.**

| X | | Y | |
|---|---|---|---|
| (i) | கான்வர் | A | பிரதிஸ்தான் |
| (ii) | சாதவாகனர் | B | தஞ்சாவூர் |
| (iii) | சோழர் | C | மதுரை |
| (iv) | பல்லவர் | D | பாடலிபுத்ரம் |
| (v) | பாண்டியர் | E | காஞ்சி |

(1) ABDEC (2) BADCE (3) CADEB (4) DABEC (5) DBAEC (.........)

**18.**

| X | | Y | |
|---|---|---|---|
| (i) | கோசல தேவி | A | பிரசேனாஜித் |
| (ii) | மல்லிகா தேவி | B | பிம்பிசாரன் |
| (iii) | விதிசா தேவி | C | கிரகவர்மன் |
| (iv) | இராஜஶ்ரீ | D | அஜாதசத்ரு |
| (v) | வஜிரா | E | அசோகன் |

(1) ABECD (2) BAECD (3) BAEDC (4) CABED (5) DAEBC (.........)

**19.**

| X | | Y | |
|---|---|---|---|
| (i) | ஐகோள் | A | கௌதமி பாலஶ்ரீ |
| (ii) | பிதரி | B | கனிஷ்கர் |
| (iii) | ஹதிகும்பா | C | ஸ்கந்தகுப்தன் |
| (iv) | சாரநாத் | D | காரவேல |
| (v) | நாஷிக் | E | இரண்டாம் புலிகேசி |

(1) CEDBA (2) DCABE (3) DECAB (4) EDCBA (5) ECDBA (.........)

**20.**

| X | | Y | |
|---|---|---|---|
| (i) | கடுங்கோன் | A | பல்லவர் |
| (ii) | விஜயாலயன் | B | சாதவாகனர் |
| (iii) | சிம்மவிஷ்ணு | C | பாண்டியர் |
| (iv) | தந்திதுர்க | D | சோழர் |
| (v) | சிமுக | E | இராஷ்டிரகூடர் |

(1) ACDEB (2) CADEB (3) CDAEB (4) DCEBA (5) DECAB (.........)

[பக். 4 ஐப் பார்க்க

- **21** தொடக்கம் **25** வரையுள்ள ஒவ்வொரு வினாவுக்கும் உரிய சரியான விடையைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**21.** பாடலிபுத்திர நகரத்தின் தாபகர் யார்?
(1) பிம்பிசாரர் (2) உதயன் (3) மகா பத்மநந்தன்
(4) சந்திரகுப்த மௌரியன் (5) புஸ்யமித்ர சுங்கன் (.........)

**22.** எகிப்திய மன்னனான தொலமி பில்டல்போஸினால் மௌரியர் அரச சபைக்கு அனுப்பப்பட்ட தூதுவன் யார்?
(1) டெய்மாகோஸ் (2) மெகஸ்தெனிஸ் (3) டியோடரஸ்
(4) டியோனிசியஸ் (5) அன்ரியோகஸ் (.........)

**23.** நாலந்தா பௌத்த மடாலயத்தின் தாபகராகக் கருதப்படுபவர் யார்?
(1) முதலாம் குமாரகுப்த (2) கோபால (3) தேவபால
(4) தர்மபால (5) விஷ்ணுகுப்த (.........)

**24.** சோமநாத் கோயில் எந்தக் கடவுளுக்காக அர்ப்பணிக்கப்பட்டது?
(1) விஷ்ணு (2) சிவன் (3) சூரியன்
(4) கிருஷ்ணர் (5) அக்னி (.........)

**25.** சோழப் பேரரசு எத்தனை மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது?
(1) ஆறு (2) ஏழு (3) எட்டு
(4) பன்னிரெண்டு (5) பதினான்கு (.........)

- **26** தொடக்கம் **30** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** உரிய தலைப்பிற்குப் **பொருந்தாதுள்ளது. அப்பொருந்தாததைத்** தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

**26. சிந்துவெளி நகரத் திட்டமிடல்**
(1) நகரத் திட்டமிடலும் சுகாதாரப் பராமரிப்பும் சிந்துவெளி நாகரிகத்தின் மிக முக்கியமான அம்சங்களாகும்.
(2) வீதிகளும் ஒழுங்கைகளும் திட்டமொன்றிற்கேற்ப அமைக்கப்பட்டிருந்தன.
(3) மொகஞ்சதாரோவிலும் ஹரப்பாவிலும் கட்டடங்கள் கருங்கற்களினால் கட்டப்பட்டிருந்தன.
(4) வீதிகளினதும் ஒழுங்கைகளினதும் அகலம் 9 தொடக்கம் 34 அடிகளாகக் காணப்பட்டது.
(5) முக்கியமான சிந்துவெளி நகரங்கள் கோட்டை, தாழ்நகரப் பகுதி என இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. (.........)

**27. அசோகன் கல்வெட்டுக்கள்**
(1) அசோகன் கல்வெட்டுக்கள் கிரேக்க, அரமிக், பிராகிருத மொழிகளில் எழுதப்பட்டிருந்தன.
(2) அசோகனின் சில கல்வெட்டுக்கள் பாரசீகத்திலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.
(3) அரமிக், கிரேக்க, கறோஷ்டி, பிராமி ஆகிய எழுத்து வடிவங்களில் இவை எழுதப்பட்டுள்ளன.
(4) கரோஷ்டி எழுத்துக்கள் வலது புறத்திலிருந்து இடது புறமாகவும், பிராமி எழுத்துக்கள் இடது புறத்திலிருந்து வலது புறமாகவும் எழுதப்பட்டுள்ளன.
(5) கந்தகாருக்கு அண்மையில் காணப்பட்ட கல்வெட்டு கிரேக்க, அரமிக் ஆகிய இருமொழிகளிலும் எழுதப்பட்டுள்ளது. (.........)

**28. காந்தாரக்கலை**
(1) புத்தரின் சிலைகள் மனித வடிவத்தில் கல்லில் செதுக்கப்பட்டுள்ளன.
(2) காந்தாரக்கலைக்கு முன்னர் பாதச்சுவடு, போதிமரம், குடை, தர்மசக்கரம் போன்ற குறியீடுகளால் புத்தர் அடையாளப்படுத்தப்பட்டார்.
(3) அனேகமான காந்தாரக்கலை வடிவங்கள் புருஷபுரத்திலும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலுமிருந்து கிடைக்கப்பெற்றுள்ளன.
(4) காந்தாரக்கலையானது பெருமளவில் மதுரா, அமராவதி கலை மரபுகளின் செல்வாக்கிற்கு உட்பட்டதாக நம்பப்படுகின்றது.
(5) இந்தக் கலைமரபானது "கிரேக்க-பௌத்த கலை" அல்லது "இந்தோ-ஹெலனிக் கலை" என்றும் அழைக்கப்படுகின்றது. (.........)

[பக். 5 ஐப் பார்க்க

**29.** குப்தப் பேரரசின் வீழ்ச்சி

(1) குப்தப் பேரரசின் வீழ்ச்சி கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியுடன் ஆரம்பமாகின்றது.
(2) குப்தப் பேரரசின் வீழ்ச்சிக்கு வழிவகுத்த முக்கிய காரணி ஹூணர்களின் படையெடுப்பாகும்.
(3) உள்நாட்டுப் பிரச்சினைகள் பிராந்திய ஆட்சியாளர்கள் சுதந்திரம் பெறுவதற்கு வழிவகுத்தன.
(4) பாடலிபுத்திரம் குப்தர்களின் வீழ்ச்சியோடு தலைநகரம் என்ற முக்கியத்துவத்தை இழந்தது.
(5) குப்தப் பேரரசின் வீழ்ச்சியிலிருந்து முஸ்லிம்களின் வருகை வரையான காலப்பகுதியில் எந்த ஒரு மன்னனாலும் வட இந்தியாவை ஒன்றிணைக்க முடியவில்லை. (.........)

**30.** தென் இந்தியா

(1) தென் இந்தியாவைக் கைப்பற்றி தன் இராச்சியத்துடன் இணைத்துக் கொண்ட ஒரேயொரு வட இந்திய ஆட்சியாளன் ஹர்ஷவர்த்தனனே ஆவான்.
(2) விந்திய மலைக்குத் தெற்காக இருந்த நிலப்பகுதி தென் இந்தியா எனக் கருதப்படுகிறது.
(3) கிருஷ்ணா - துங்கபத்திரா நதிகளுக்கு வடக்காக உள்ள பகுதி தக்கணம் (டெக்கான்) எனக் குறிப்பிடப்படுகிறது.
(4) கி.பி. எட்டாம் நூற்றாண்டின் மத்தியிலிருந்து தக்கணத்தின் பெரும்பகுதி முதலில் இராஷ்டிரகூடர்களினாலும் பின்னர் சாளுக்கியர்களினாலும் ஆளப்பட்டது.
(5) பல்லவர், பாண்டியர், சோழர் ஆகியோர் இராஷ்டிரகூடர், சாளுக்கியரின் சமகால ஆட்சியாளர்களாவர். (.........)

● **31** தொடக்கம் **35** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A)**, **(B)**, **(C)**, **(D)** என்னும் நான்கு தெரிவுகள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் ஒன்று அல்லது பல சரியான விடையாகும். சரியான விடை அல்லது விடைகளைத் தெரிவுசெய்து,

**(A)** யும் **(B)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **1** எனவும்
**(A)** யும் **(C)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **2** எனவும்
**(B)** யும் **(C)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **3** எனவும்
**(C)** யும் **(D)** யும் மாத்திரம் சரியாயின் ........................................ **4** எனவும்
வேறு விடைகளின் எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரியாயின் ......... **5** எனவும்
**அடைப்புக்குறியினுள்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மாத்திரம் சரி | **(A)** யும் **(C)** யும் மாத்திரம் சரி | **(B)** யும் **(C)** யும் மாத்திரம் சரி | **(C)** யும் **(D)** யும் மாத்திரம் சரி | **வேறு விடைகளின்** எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரி |

**31.** மகாபாரதம்

(A) மகாபாரதத்தின் ஆசிரியராக வியாசர் கருதப்படுகின்றார்.
(B) இந்தக் காவியம் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் இடையிலான முரண்பாடுகளைப் பேசுகின்றது.
(C) குருஷேத்திர யுத்தத்தில் யுதிஷ்டிரர் பெற்ற வெற்றியோடு இப்போர் முடிவடைகின்றது.
(D) பாண்டவர்கள் கி.பி. ஆறாம் நூற்றாண்டிலும் வலிமை கொண்ட இனக் குழுமமாக விளங்கினர்.

(.........)

**32.** இருக்கு வேத மக்கள்

(A) காபூலிலிருந்து கங்கைச் சமவெளி வரையிலான பரந்த பிரதேசத்தை இருக்கு வேத மக்கள் அறிந்திருந்தனர்.
(B) விந்திய மலைக்குத் தெற்கே உள்ள பிரதேசத்தையும் அவர்கள் அறிந்திருந்தனர்.
(C) கடல் பற்றி அவர்கள் அறியாதிருந்தனர்.
(D) இருக்கு வேத மக்களின் பிரதான உணவாக சோறு இருந்தது.

(.........)

**33.** பாண்டியர்

(A) இந்தியத் தீபகற்பத்தின் தென்முனையிலிருந்து கிழக்குக் கரையோரம் வரையான பகுதி பாண்டிய மன்னர்களால் ஆட்சி செய்யப்பட்டது.
(B) ஸ்ரீமாறஸ்ரீவல்லபன் எனும் பாண்டிய ஆட்சியாளன், இலங்கை அரசனையும் பல்லவ, கங்க, சோழ ஒன்றிணைந்த படையினையும் தோற்கடித்தான்.
(C) முதலாம் இராஜராஜனால் சோழப் பேரரசுடன் பல்லவ இராச்சியம் இணைக்கப்பட்டதுடன் பாண்டிய இராச்சியம் முடிவடைந்தது.
(D) பாண்டியர் இந்து மதத்தின் ஆதரவாளர்களாக இருந்தபோதும் பௌத்த மதம் அவர்களின் ஆட்சியில் செழித்து வளர்ந்தது.

(.........)

[பக். 6 ஐப் பார்க்க

**34.** பல்லவர்

(A) சாதவாகனரின் வீழ்ச்சியின் பின்னர் தக்கணத்தில் பல்லவர் அதிகாரத்திற்கு வந்தனர்.
(B) முதலாம் மகேந்திரவர்மனின் ஆட்சிக்காலத்தில் பல்லவருக்கும் சாளுக்கியருக்கும் இடையிலான மோதல்கள் ஆரம்பமாகின.
(C) முதலாம் நரசிம்மவர்மனின் படையினர் சாளுக்கிய மன்னனான இரண்டாம் புலிகேசியைத் தோற்கடித்ததுடன் அவனைக் கொலையும் செய்தனர்.
(D) இரண்டாம் புலிகேசியின் மரணத்தின் பின்னர் சாளுக்கியரின் தலைநகரமான வாதாபி பல்லவ இராச்சியத்தின் ஒரு மாகாண நிர்வாக மையமாக மாறியது.

(.........)

**35.** ஹர்ஷவர்த்தனன்

(A) குப்தர்களுக்குப் பின்னர் வடக்கு மற்றும் தெற்கு இந்தியாவை ஒன்றிணைப்பதில் ஹர்ஷவர்த்தனன் வெற்றி கண்டான்.
(B) ஹர்ஷவர்த்தனன் கௌடா அரச குடும்பத்துடன் திருமண உறவுகளை ஏற்படுத்திக்கொண்டான்.
(C) ஹர்ஷவர்த்தனன் முதலில் தானேஸ்வரின் ஆட்சியுரிமையைப் பெற்றதுடன் கானோஜ் சிம்மாசனத்துக்கு சட்டபூர்வ வாரிசு இல்லாத நிலையில் கானோஜின் அரசுரிமையை ஏற்றுக்கொள்ளுமாறு அழைக்கப்பட்டான்.
(D) ஹர்ஷவர்த்தனன் தனது தலைநகரை தானேஸ்வரிலிருந்து கானோஜிற்கு மாற்றிக்கொண்டான்.

(.........)

● **36** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்களில் **இரண்டு** கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **1** | சரியானது | பிழையானது |
| **2** | சரியானது | சரியானது |
| **3** | பிழையானது | பிழையானது |
| **4** | பிழையானது | சரியானது |
| **5** | சரியானது | சரியானதும் **முதலாம்** கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| **36.** | அங்குத்தர நிக்காயத்தில் கி.மு. ஆறாம் நூற்றாண்டில் இந்தியாவில் பதினாறு மகாஜனபதங்கள் இருந்ததாகக் குறிப்பிடப்படுகிறது. | அப்பதினாறு மகாஜனபதங்களுள் சாக்கயாஸ், பக்காஸ், பூலி, காலமஸ், கோலியஸ், மோரியஸ், விதேகஸ், லிச்சவி ஆகிய கணராஜ்யங்கள் காணப்பட்டன. | (.........) |
| **37.** | சமண தீர்த்தங்கரரில் இறுதியானவரான மகாவீரர், பிம்பிசார மன்னரின் சம காலத்தவர் ஆவார். | கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வல்லபையில் சமண தீர்த்தங்கரரின் போதனைகள் எழுதப்பட்டன. | (.........) |
| **38.** | மௌரிய அரச சபையில் மகா அலெக்சாந்தரின் தூதுவராக மெகஸ்தெனிஸ் இருந்தார். | பாடலிபுரத்தின் மாநகர நிர்வாகம் ஆறு ஆணையாளர் சபைகளினால் நடத்தப்பட்டது என்று மெகஸ்தெனிஸ் குறிப்பிடுகின்றார். | (.........) |
| **39.** | அசோகன் தன் கல்வெட்டுக்களில் தன் இராச்சியத்தின் தெற்கு எல்லையில் பாண்டியர்கள் சுதந்திரமான மக்களாக இருந்தனர் என விபரிக்கின்றார். | பாண்டிய இராச்சியத்தின் தூதுக் குழுவொன்றை உரோமப் பேரரசனான ஒகஸ்ரஸ் சீசருக்கு அனுப்பியதாக ஸ்ராபோ குறிப்பிடுகின்றார். | (.........) |
| **40.** | அலகபாத் தூண் சாசனம் காலவரன் முறையில் சமுத்திரகுப்த மன்னனின் யுத்த வெற்றிகள் பற்றிய தகவல்களைத் தருகின்றது. | சமுத்திரகுப்தனால் தக்ஷிணபதத்தின் ஆட்சியாளர்கள் தோற்கடிக்கப்பட்டு, கைப்பற்றப்பட்ட பின்னர் அவர்களைத் தனது அதிகாரத்தின் கீழ் ஆட்சிபுரிவதற்கு அனுமதித்தான். | (.........) |

[பக். 7 ஐப் பார்க்க

※ ※

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉතිහාසය I (II කොටස)
வரலாறு I (பகுதி II)
History I (Part II)

25 - A T II

இந்திய வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1206 வரை

**அறிவுறுத்தல்கள் :**

※ **முதலாம்** வினாவிற்கும் வேறு **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(முதலாம் வினாவிற்கு விடையளிப்பதற்காக **இந்திய புறவுருவப்படம்** வழங்கப்படும்.)

## பகுதி II

**1.** உமக்கு வழங்கப்பட்டுள்ள புறவுருவப்படத்தில் கீழே தரப்பட்டுள்ள **எல்லா இடங்களையும் குறித்துப் பெயரிட்டு,** அவற்றுள் எவையேனும் **இரண்டுக்குச்** சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.

(i) ஹரப்பா (ii) விந்திய மலை
(iii) தக்ஷீலா (iv) யமுனா நதி
(v) கலிங்கம் (vi) பிரயாக்
(vii) காஞ்சி (viii) ஐகோள்

*(சரியாகக் குறித்துப் பெயரிடப்பட்ட ஒவ்வொன்றுக்கும் **01** புள்ளி வீதமாகும்; ஒவ்வொரு சுருக்கமான குறிப்புக்கும் **05** புள்ளிகள் வீதமாகும்.)*

**2.** சிந்துவெளி மக்களின் சமூக, பொருளாதார நிலைமைகள் பற்றிப் பரிசீலனை செய்க. (14 புள்ளிகள்)

**3.** "பிந்திய வேதகாலம் ஒரு நிலைமாறும் காலப்பகுதியாகும்."

(i) பிந்திய வேதகாலக் குடியிருப்புக்கள் பிரதானமாக எந்த நதிக்கு அண்மையில் அமைந்திருந்தன? (01 புள்ளிகள்)

(ii) பிந்திய வேதகாலம் பற்றிய தகவல்களைப் பெற்றுக்கொள்ளத்தக்க மூலாதாரங்கள் **இரண்டின்** பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) பிந்திய வேதகால சமுதாயத்தின் பிரதான பண்புகளை விளக்குக. (04 புள்ளிகள்)

(iv) இருக்கு வேதகாலத்தில் நிலவிய அரசியல், சமய நிலைமைகள் பிந்திய வேதகாலத்தில் மாற்றமடைந்த விதத்தைப் பரிசீலனை செய்க. (07 புள்ளிகள்)

**4.** "அசோகனின் தர்ம கொள்கையானது பௌத்த சமயத்தின் பெருமளவு செல்வாக்கைக் கொண்டுள்ளது." இக்கூற்றினை நுணுக்கமாகப் பரிசீலனை செய்க. (14 புள்ளிகள்)

**5.** மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்கும் குப்தப் பேரரசின் எழுச்சிக்கும் இடைப்பட்ட காலப்பகுதியில் வடமேற்கு இந்தியாவில் அரசியல்துறையில் பல்வேறு வெளிநாட்டுப் படையெடுப்பாளர்களின் செயற்பாடுகளை பரிசீலனை செய்க. (14 புள்ளிகள்)

[பக். 8 ஐப் பார்க்க

**6.** "இரண்டாம் சந்திரகுப்தன் ஆட்சிக் காலத்திலே குப்தப் பேரரசின் ஆதிக்கம் அதன் உச்ச நிலையை அடைந்தது."

(i) இரண்டாம் சந்திரகுப்தன் ஆட்சிக் காலத்திலே இந்தியாவிற்கு வருகை தந்த புகழ் பெற்ற யாத்திரிகரான சீனத்துறவியின் பெயரைக் குறிப்பிடுக. (01 புள்ளிகள்)

(ii) இரண்டாம் சந்திரகுப்தன் பயன்படுத்திய **இரண்டு** விருதுப் பெயர்களைக் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)

(iii) இரண்டாம் சந்திரகுப்தன் தனது அரசியல் அதிகாரத்தை விரிவுபடுத்துவதற்காக மேற்கொண்ட திருமண உறவுகள் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iv) குப்தப் பேரரசின் விரிவாக்கத்திற்காக இரண்டாம் சந்திரகுப்தன் மேற்கொண்ட இராணுவப் படையெடுப்புகள் பற்றிப் பரிசீலனை செய்க. (08 புள்ளிகள்)

**7.** பின்வரும் தலைப்புக்களில் வங்காளத்தில் பால வம்சத்தின் முக்கியத்துவத்தை விளக்குக.

(i) வங்காளத்தில் ஓர் இராச்சியத்தை ஏற்படுத்தியமை

(ii) பால வம்சத்தினரின் ஆட்சியில் ஏற்பட்ட சமய, கலாசார முன்னேற்றம்

(14 புள்ளிகள்)

**8.** பின்வரும் தலைப்புகளுள் எவையேனும் **இரண்டினது** வரலாற்று முக்கியத்துவம் தொடர்பாகச் சிறு குறிப்பு எழுதுக.

(i) வடமேற்கு எல்லைக் கணவாய்கள்

(ii) கி.மு. ஆறாம் நூற்றாண்டில் காணப்பட்ட குடியரசுகள்

(iii) அலகபாத் மெய்க்கீர்த்தி

(iv) அராபிய, துருக்கிய படையெடுப்புகள்

(07 × 2 = 14 புள்ளிகள்)

**9.** **(A)** பகுதிக்கு **அல்லது** **(B)** பகுதிக்கு மாத்திரம் விடை எழுதுக.

**(A)** இரண்டாம் புலிகேசியின் ஆட்சியில் தக்கணத்தில் சாளுக்கிய ஆதிக்கத்தின் விரிவாக்கம் பற்றிப் பரிசீலனை செய்க. (14 புள்ளிகள்)

**(B)** முதலாம் இராஜேந்திரன் சோழ ஆதிக்கத்தை இந்தியாவிலும் வெளிநாட்டிலும் எவ்வாறு விரிவாக்கம் செய்தான் என்பதனைப் பரிசீலனை செய்க. (14 புள்ளிகள்)

* * *


Department of Examinations Sri Lanka

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

| | | | |
|---|---|---|---|
| ඉතිහාසය II<br>வரலாறு II<br>History II | 25-A | T |

ප්‍රශ්න අංකය / வினா இல. / Question No. **1**

විභාග අංකය / சுட்டெண் / Index No. ....................................



පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉතිහාසය II (I කොටස)
வரலாறு II (பகுதி I)
History II (Part I)

25-B | T | II

23.08.2019 / 0830 – 1140

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

ஐரோப்பிய வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1989 வரை

சுட்டெண் : ..................................

**அறிவுறுத்தல்கள் :**

- ※ இப்பகுதி **40** வினாக்களைை கொண்டுள்ளது. எல்லா வினாக்களுக்கும் இவ்வினாத்தாளிலேயே விடை எழுதுக.
- ※ ஒவ்வொரு வினாவுக்கும் தரப்படுள்ள **ஐந்து** தெரிவுகளில் **ஒன்று** மட்டுமே சரியானது. அச்சரியான விடையைத் தெரிவுசெய்து தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கேற்ப குறிப்பிடுக.
- ※ இப்பகுதிக்கு **40** புள்ளிகள் வழங்கப்படும்.
- ※ இரண்டு பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் மூன்று மணித்தியாலங்களாகும். விடைகளை எழுதிய பின்னர், பகுதி **I** இன் விடைத்தாள்களை பகுதி **II** இன் விடைத்தாள்களுடன் இணைத்துக் கையளிக்குக.

## பகுதி I

● **1** தொடக்கம் **10** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ காரணத்தினால் ஏனையவற்றுடன் பொருந்தாதுள்ளது. பொருந்தாத அப்பெயரை இனங்கண்டு, அதன் இலக்கத்தை அடைப்புக் குறியினுள் எழுதுக.

**1.** (1) அசோவ் (2) அல்ப்ஸ் (3) அப்பினைண்ஸ் (4) காக்கோஸஸ் (5) பிரணீஸ் (.........)

**2.** (1) சியூஸ் (2) அதீனா (3) அபுறோடைற் (4) பொஸிடன் (5) யூபிற்றர் (.........)

**3.** (1) முடியாட்சி (2) உயர்குடியாட்சி (3) கடவுள் ஆட்சி (4) கொடுங்கோலாட்சி (5) ஜனநாயகம் (.........)

**4.** (1) சோலன் (2) சிசரோ (3) பிஸிஸ்றற்றஸ் (4) கிளிஸ்தெனிஸ் (5) பெரிக்கிளிஸ் (.........)

**5.** (1) தேலஸ் (2) பைதகரஸ் (3) டிமோகிறிற்றஸ் (4) டியோனிஸஸ் (5) ஆர்க்கிமிடிஸ் (.........)

**6.** (1) பாராளுமன்றம் (2) பிரிவு கவுன்சில் (3) ஸ்ரேற்ஸ் ஜெனரல் (4) றைஸ்ராக் (5) டூமா (.........)

**7.** (1) திரபல்கார் போர் (2) ஒஸ்ரலிற்ஸ் போர் (3) மசென்ரா போர் (4) ஜெனா போர் (5) லீப்ஸிக் போர் (.........)

**8.** (1) ஏக்-லா-சப்பெல் (2) றொப்போ (3) லைபாச்
(4) விலா பிறாங்கா (5) வெறோனா (.........)

**9.** (1) லொயிட் ஜோர்ஜ் (2) கிளிமென்சோ (3) வூட்றோ வில்சன்
(4) ஒர்லாண்டோ (5) ரூஸ்வெல்ற் (.........)

**10.** (1) பிரித்தானிய பொதுநலவாயம் (2) உலக சுகாதார ஸ்தாபனம் (WHO)
(3) வட அத்திலாந்திக் ஒப்பந்த தாபனம் (NATO) (4) வார்ஸோ ஒப்பந்தம்
(5) ஐரோப்பிய ஒன்றியம் (EU) (.........)

● **11** தொடக்கம் **15** வரையான வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப் பெயர்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடன் ஒன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புக் குறியினுள்** எழுதுக.

**11.** (1) ஹோமர் - ஒடிஸி
(2) சோபோகிளிஸ் - ஒடிபஸ் றெக்ஸ்
(3) அரிஸ்ரோபேன்ஸ் - முகில்கள் (The Clouds)
(4) சோக்கிரட்டிஸ் - அரசியல் (Politics)
(5) பிளேட்டோ - குடியரசு (The Republic) (.........)

**12.** (1) தொலமி - புவி மையக் கோட்பாடு
(2) கொபர்னிக்கஸ் - சூரிய மையக் கோட்பாடு
(3) ஐசாக் நியூட்டன் - பரிணாம வளர்ச்சி கோட்பாடு
(4) மேரி கியூரி - ரேடியத்தின் கண்டுபிடிப்பு
(5) அல்பேர்ட் ஐன்ஸ்ரீன் - சார்பியல் கோட்பாடு (.........)

**13.** (1) வலோய் - பிரான்ஸ்
(2) பிறகன்ஸா - ஸ்பெயின்
(3) ஒரேஞ் - நெதர்லாந்து
(4) றோமனோவ் - ரஷ்யா
(5) சவோய் - இத்தாலி (.........)

**14.** (1) நூற்றாண்டுப் போர் - பிரான்ஸ் ஒரு பங்காளி
(2) முப்பதாண்டுப் போர் - பிரான்ஸ் ஒரு பங்காளி
(3) ஏழாண்டுப் போர் - பிரான்ஸ் ஒரு பங்காளி
(4) கிரிமியன் போர் - பிரான்ஸ் ஒரு பங்காளி
(5) ஏழு கிழமை யுத்தம் - பிரான்ஸ் ஒரு பங்காளி (.........)

**15.** (1) ஜோன் லொக் - தனி முதன்மை வாய்ந்த முடியாட்சி
(2) ஜெரமி பெந்தம் - பயன்பாட்டு வாதம்
(3) வி. ஐ. லனின் - பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரம்
(4) லியோன் ட்றொட்ஸ்கி - நிரந்தரப்புரட்சி
(5) ஜோசப் ஸ்ராலின் - ஒரு நாட்டில் சமதர்மம் (.........)

● **16 - 25** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் என்பவற்றின் தொகுதிகள் **X, Y** நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் ஒழுங்கிலே **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையிலே தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கில் **தரப்படவில்லை. Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலிற்கேற்பச் சரியாக ஒழுங்குப்படுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களுள் **ஒன்று** சரியானதாகும். சரியான சேர்மானத்தைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக்கோட்டில்** எழுதுக.

**16.**

| X | Y |
|---|---|
| (i) ஹெரகிளிற்றஸ் | A "நற்பண்பே அறிவாகும்." |
| (ii) பிறற்றோகோரஸ் | B "மனிதன் ஒரு அரசியல் மிருகம்." |
| (iii) சோக்கிரட்டிஸ் | C "ஒரே நதியில் இரு அடி வைப்பது முடியாத காரியம்." |
| (iv) அரிஸ்ரோட்டல் | D "ஒவ்வொரு நோய்க்கும் ஒரு இயற்கைக் காரணம் உண்டு." |
| (v) ஹிப்போகிரட்டிஸ் | E "எல்லாவற்றினதும் அளவுகோல் மனிதனேயாவான்." |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

[பக். 3 ஐப் பார்க்க

**17.**

| X | Y |
|---|---|
| (i) பார்த்தினொன் | A மொஸ்கோ |
| (ii) கொலோஸியம் | B பரிஸ் |
| (iii) கிராம்ளின் | C லண்டன் |
| (iv) வெஸ்ற்மினிஸ்டர் மாளிகை | D அதென்ஸ் |
| (v) நோற்றே டாம் தேவாலயம் | E உரோம் |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

**18.**

| X | Y |
|---|---|
| (i) மஸாஸியோ | A இறுதி இராப்போசனம் |
| (ii) பெற்றி செல்லி | B ஆதாமும் ஏவாளும் நந்தவனத்திலிருந்து வெளியேற்றப்படல் |
| (iii) லியனாடோ டாவின்ஸி | C இறுதி தீர்ப்பு |
| (iv) மைக்கல் ஏஞ்சலோ | D பேரரசர் ஐந்தாம் சார்ள்ஸ |
| (v) ரிற்றியன் | E வீனஸின் பிறப்பு |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

**19.**

| X | Y |
|---|---|
| (i) இராஸ்மஸ் | A சட்டங்களின் உயிர் |
| (ii) தோமஸ் மூர் | B தேசங்களின் செல்வம் |
| (iii) மொன்டெஸ்கியூ | C லெவியாதான் |
| (iv) தோமஸ்ஹொப்ஸ் | D யுத்தோப்பியா |
| (v) அடம்ஸ்மித் | E மூடர்களின் புகழ்ச்சி |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

**20.**

| X | Y |
|---|---|
| (i) மகோன்னத புரட்சி | A புத்திஜீவிகளின் புரட்சி |
| (ii) அமெரிக்கப் புரட்சி | B சர்வதேச மனித உரிமைகள் பிரகடனம் |
| (iii) பிரெஞ்சுப் புரட்சி | C சுதந்திரப் பிரகடனம் |
| (iv) 1848 புரட்சி | D உரிமை மனு |
| (v) ஐக்கிய நாடுகள் தாபனம் | E மனித உரிமைகள் பிரகடனம் |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

**21.**

| X | Y |
|---|---|
| (i) லுனிவில் ஒப்பந்தம் | A ரஷ்யாவும் ஒட்டோமன் துருக்கியும் |
| (ii) பிராங்பேர்ட் ஒப்பந்தம் | B ரஷ்யாவும் ஜப்பானும் |
| (iii) சான் ஸ்ரிபனோ ஒப்பந்தம் | C பிரான்சும் ஆஸ்திரியாவும் |
| (iv) போர்ட்ஸ்மவுத் ஒப்பந்தம் | D ரஷ்யாவும் ஜேர்மனியும் |
| (v) பிறெஸ்ற் - லிற்றோவ்ஸ்க் ஒப்பந்தம் | E பிரான்சும் ஜேர்மனியும் |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

**22.**

| X | Y |
|---|---|
| (i) றைன் கூட்டமைப்பு | A பிஸ்மார்க் |
| (ii) ஜேர்மன் கூட்டமைப்பு | B நெப்போலியன் பொனப்பார்ட் |
| (iii) வட ஜேர்மன் கூட்டமைப்பு | C முதலாம் கெய்சர் வில்லியம் |
| (iv) ஜேர்மனிய பேரரசு | D பிறைறிக் ஈபேற் |
| (v) வெய்மார் குடியரசு | E மெற்றர்ணிக் |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

**23.**

| X | Y |
|---|---|
| (i) நெப்போலியன் பொனப்பார்ட் | A புதிய பொருளாதாரக் கொள்கை |
| (ii) ஒட்டோவொன் பிஸ்மார்க் | B பிறஸ்ரோறிக்கா அல்லது பொருளாதார மறுசீரமைப்பு |
| (iii) வி. ஐ. லெனின் | C சமாதான சக வாழ்வு |
| (iv) நிகிதா குருச்சேவ் | D கண்டத்திட்டுக் கொள்கை |
| (v) மிகையில் கொர்பச்சேவ் | E இரத்தமும் இரும்பும் கொள்கை |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

[பக். 4 ஐப் பார்க்க



Department of Examinations Sri Lanka

**24.**

| | X | | Y |
|---|---|---|---|
| (i) | செஞ்சட்டை இராணுவம் | A | முசோலினி |
| (ii) | செம்படை இராணுவம் | B | ஹிட்லர் |
| (iii) | வெண்படை இராணுவம் | C | றொட்ஸ்கி |
| (iv) | கருஞ்சட்டை இராணுவம் | D | கரிபோல்டி |
| (v) | பழுப்புச் சட்டை (பிரௌண்) இராணுவம் | E | கோர்ணிலோவ் |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

**25.**

| | X | | Y |
|---|---|---|---|
| (i) | வார்ஸோ | A | ருமேனியா |
| (ii) | புடாபெஸ்ற் | B | யூகோசிலாவியா |
| (iii) | புக்காரெஸ்ற் | C | பல்கேரியா |
| (iv) | சோபியா | D | ஹங்கேரி |
| (v) | பெல்கிரேட் | E | போலந்து |

(1) BEACD (2) CEABD (3) DCEAB (4) DEACB (5) EDACB (.........)

- **26** தொடக்கம் **30** வரையான வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு **மாற்று விடைகள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று அல்லது பல சரியான விடைகளாகும். சரியான விடையை அல்லது விடைகளை தெரிவுசெய்து.

**(A)** யும் **(B)** யும் மட்டும் சரியாயின் ................................................................ **1** எனவும்,
**(A)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ................................................................ **2** எனவும்,
**(B)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ................................................................ **3** எனவும்,
**(C)** யும் **(D)** யும் மட்டும் சரியாயின் ................................................................ **4** எனவும்,
வேறு விடைகளின் எண்ணிக்கை அல்லது சேர்க்கை சரியாயின்................................ **5** எனவும்
**அடைப்புக் குறியினுள்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மட்டும் சரி | **(A)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(B)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(C)** யும் **(D)** யும் மட்டும் சரி | **வேறு விடைகளின்** எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரியாயின் |

**26.** **எதிர்மத சீர்திருத்தம் தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**
(A) உரோம கத்தோலிக்க திருச்சபைக்கு எதிரான இயக்கமாக எதிர்மத சீர்திருத்தம் எழுச்சி பெற்றது.
(B) எதிர் மதச் சீர்திருத்தத்தின் ஒரு முக்கியமான மூலமாக யேசு சபை காணப்பட்டது.
(C) ஸ்பெயினில் 1479 மத விசாரணை மன்று ஏற்படுத்தப்பட்டது.
(D) புரட்டஸ்தாந்துக் கோட்பாடுகளை றென்றில் கூடிய சபை வரையறுத்து தெளிவாக்கியது. (.........)

**27.** **கைத்தொழிற் புரட்சி தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**
(A) விவசாயப் பொருளாதார முறைமையிலிருந்து தொழிற்சாலைகளில் இயந்திரங்களைப் பயன்படுத்தி உற்பத்தியை அடிப்படையாகக் கொண்ட நகரப்பொருளாதார முறைமை நோக்கி ஏற்பட்ட மாற்றமே தொழிற்புரட்சி என அழைக்கப்படுகின்றது.
(B) கைத்தொழிற் புரட்சி உற்பத்தியையும் பொருளாதார வளர்ச்சியையும் அதிகரித்தது.
(C) கைத்தொழிற் புரட்சி முதலில் பிரான்ஸில் ஏற்பட்டது.
(D) ஐரோப்பாவில் முதலில் முழுமையான கைத்தொழில்மயப்பட்ட முதலாவது நாடாகப் போர்த்துக்கல் காணப்பட்டது. (.........)

[பக். 5 ஐப் பார்க்க

**28.** **நெப்போலியன் பொனப்பார்ட் பற்றிய பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**

(A) நெப்போலியன் பொனப்பார்ட் (பிரான்ஸ்) புரட்சியின் குழந்தை என அழைக்கப்படுகிறான்.

(B) நெப்போலியன் பொனப்பார்ட் நைல் நதி யுத்தத்தில் இங்கிலாந்தைத் தோற்கடித்தான்.

(C) நெப்போலியன் பொனப்பார்ட் பிரான்ஸியப் பேரரசனாக 1804 இல் முடிசூட்டப்பட்டான்.

(D) நெப்போலியன் பொனப்பார்ட் உத்தியோகபூர்வ அரச மதமாக கல்வினிஸத்தை அங்கீகரித்தான். (.........)

**29.** **ஜேர்மனியை ஐக்கியப்படுத்தல் தொடர்பாகப் பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**

(A) ஆஸ்திரியாவின் தலைமைத்துவத்தின் கீழ் ஜேர்மனி ஐக்கியப்படுத்தப்பட்டது.

(B) ஜேர்மனியை ஐக்கியப்படுத்துவதற்கு கார்பனரி இயக்க அங்கத்தவர்கள் பல தடவைகள் முயற்சிகளை மேற்கொண்டனர்.

(C) செல்ஷிவிக், கொல்ஸ்ரின் மீதான யுத்தத்தின்போது 1864 இல் ஆஸ்திரியாவும் பிரஷியாவும் டென்மார்க்கைத் தோற்கடித்தன.

(D) பிரான்ஸிய - பிரஷிய யுத்தம் ஜேர்மனியின் ஐக்கியத்தை பூரணப்படுத்தியது. (.........)

**30.** **நவபேரரசவாதம் (நவ ஏகாதிபத்தியம்) பற்றிய பின்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானவை?**

(A) கைத்தொழிற் புரட்சி நவபேரரசவாதத்திற்கு வழி அமைத்தது.

(B) மூலப்பொருட்களையும் சந்தை வாய்ப்புகளையும் பெறுவதற்காக ஐரோப்பிய வல்லரசுகளிடையே ஏற்பட்ட கடும் போட்டி காரணமாக நவபேரரசுவாதம் தோற்றம் பெற்றது.

(C) நவபேரரசவாதத்தின் விளைவாக ஐரோப்பிய வல்லரசுகளிடையே ஆபிரிக்க கண்டம் பங்கிடப்பட்டது.

(D) முதலாம் உலகப்போர் ஆரம்பமாவதற்கான ஒரு காரணம் நவபேரரசவாதமாகும். (.........)

● **31** தொடக்கம் **35** வரையான ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒன்று **உரிய தலைப்பிற்கு பொருந்தாதுள்ளது.** அதனை தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக் குறியினுள்** எழுதுக.

**31.** **மானிய முறையும் அதன் அம்சங்களும்**

(1) மத்திய கால ஐரோப்பாவில் நிலவிய அரசியல், பொருளாதார சமுக முறைமையாகும்.

(2) பிரபுக்கள் தாங்கள் வைத்திருந்த நிலத்திற்கு பதிலாகப் போர்க்காலங்களில் இராணுவ வீரர்களை மன்னனுக்கு வழங்கினர்.

(3) வலிமையான மத்திய வகுப்பினர்

(4) பண்ணை முறைமை

(5) குடியானவர் முறைமை (.........)

**32.** **இங்கிலாந்தில் பாராளுமன்ற அரசாங்க முறைமையின் வளர்ச்சி**

(1) 1215 இல் மன்னன் ஜோன், மகா சாசனத்தில் கையெழுத்திடல்

(2) 1688 புரட்சியில் மன்னனைப் பாராளுமன்றம் வெற்றிகொள்ளல் (அதிகாரத்தில்)

(3) பதினெட்டாம் நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் பிரதம அமைச்சர் பதவி முறைமை ஆரம்பமாதல்.

(4) 1832 சீர்திருத்த விதிகள் மூலம் சர்வசன வாக்குரிமை வழங்கப்பட்டமை

(5) 1911 இல் பிரபுக்கள் சபையின் அதிகாரம் குறைக்கப்பட்டமை (.........)

**33.** **தேசிய அரசு**

(1) தனிமுதன்மை வாய்ந்த முடியாட்சியில் அதிகாரங்கள் மன்னனை மையமாகக் கொண்டே காணப்பட்டன.

(2) வலிமையான நிலையான இராணுவம்

(3) அங்கீகரிக்கப்பட்ட எல்லைகள்

(4) தேசிய ஒற்றுமை உயர்ந்த அளவில் காணப்பட்டமை

(5) ஐரோப்பாவில் முதல் தேசிய அரசு ஜேர்மனியில் தோற்றம் பெற்றது. (.........)

[பக். 6 ஐப் பார்க்க

**34.** ருஷியப் புரட்சி
(1) புரட்சிக்கு பிரதான காரணமாக அரசியல், பொருளாதார அடக்கு முறைகளும் சமூக அமைதியின்மையும் காணப்பட்டது.
(2) சார் மன்னருக்கு எதிராக மேலைத்தேச வல்லரசுகள் புரட்சிக்காரர்களுக்கு ஆதரவளித்தமை
(3) தாராண்மை (மென்ஸ்விக்) புரட்சி 1917 மார்ச்சில் இடம்பெற்றது.
(4) ருஷியாவில் அதிகாரத்தைப் போல்ஷ்விக் கட்சியினர் கைப்பற்றினர்.
(5) புரட்சி வி. ஐ. லெனினால் முன்னெடுக்கப்பட்டது. (………)

**35.** பாஸிஸத்தின் பண்புகள்
(1) கடுந்தேசியவாதம்
(2) சர்வதிகார அரசாங்கமுறை
(3) ஜனநாயகத்திற்கு எவ்வித இடமுமற்ற தனிக்கட்சி அரசாங்கம்
(4) இராணுவ வலிமையும் பலாத்காரமும்
(5) சமாதானமான வெளிநாட்டுக் கொள்கை (………)

● **36** தொடக்கம் **40** வரையிலான வினாக்களில் இரண்டு வகையான கூற்றுகள் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருத்தமானதை தெரிவு செய்து, அதன் **இலக்கத்தை அடைப்புக் குறியினுள்** எழுதுக.

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **1** | சரியானது | பிழையானது |
| **2** | சரியானது | சரியானது |
| **3** | பிழையானது | பிழையானது |
| **4** | பிழையானது | சரியானது |
| **5** | சரியானது | சரியானதாக இருப்பதுடன் **முதல்** கூற்றை மேலும் விபரிக்கின்றது |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| **36.** | கிரேக்க-பாரசீக யுத்தத்தை அடிப்படையாகக் கொண்டு ஹெரடோற்றல் எழுதிய 'வரலாறு' என்ற நூலே அவரை 'வரலாற்றின் தந்தை' என இனங்காணச் செய்தது. | கிரேக்கரிடையே வரலாறு பற்றிய பாடப் பரப்பை அறிமுகப்படுத்திய ஹெரடோற்றல் சில சந்தர்ப்பங்களில் தனது கால ஆதாரங்களை விமர்சனரீதியாக பரிசீலனை செய்து பாரசீக யுத்தத்தில் உண்மையில் என்ன நடந்தது என்பதனைக் கண்டறிவதற்கு முயற்சிகள் செய்தார். | (………) |
| **37.** | பெட்ராக் 'மானிட வாதத்தின் தந்தை' என அழைக்கப்படுகின்றார். | வெஸ்ற்போலியா ஒப்பந்தம் முப்பதாண்டு போருக்கு ஒரு முடிவினை கொண்டுவந்தது | (………) |
| **38.** | வஸ்கொடகாமா 1498 இல் கள்ளிக்கோட்டையை வந்தடைந்ததும் "நாங்கள் வாசனைத் திரவியங்களையும் கிறஸ்தவர்களையும் தேடி கீழைத்தேயம் வந்தோம்" எனக் குறிப்பிட்டார். | உலகைச் சுற்றி வந்த முதல் கடல் யாத்திரிகராக வஸ்கொடகாமா இனங்காணப்படுகின்றார். | (………) |
| **39.** | பிராங்பேட் பாராளுமன்றம் மெற்றானிக்கின் தலைமையின் கீழ் நடத்தப்பட்டது. | ஜேர்மனியை அரசியல்ரீதியாக ஐக்கியப்படுத்துவதற்கு தேவையான பொருளாதார அடிப்படையை சொல்வறைன் அமைப்பு வழங்கியது. | (………) |
| **40.** | ஐரோப்பிய ஒன்றியத்தில் பிரித்தானியா நுழைவதற்கு பிரான்ஸிய ஜனாதிபதி டிகோல் ஆதரவு வழங்கினார் | மிகையில் கொர்பச்சோவின் கீழ் ரஷ்யா ஐரோப்பிய ஒன்றியத்தில் அங்கத்துவ நாடாகியது. | (………) |

❊ ❊

[பக். 7 ஐப் பார்க்க

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉතිහාසය I (II කොටස)
வரலாறு I (பகுதி II)
History I (Part II)

25-B T II

ஐரோப்பிய வரலாறு - ஆதிகாலம் முதல் கி.பி. 1989 வரை

**அறிவுறுத்தல்கள் :**

※ **முதலாம்** வினாவுக்கும் வேறு எவையேனும் **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(**முதலாம்** வினாவுக்கு விடையளிப்பதற்கு **ஐரோப்பாவின் புறவுருவப்படம்** வழங்கப்படும்.)

## பகுதி II

**1.** உமக்கு வழங்கப்பட்டுள்ள புறவுருவப்படத்தில் கீழே தரப்பட்டுள்ள **இடங்கள் எல்லாவற்றையும் குறித்துப் பெயரிட்டு** அவற்றுள் எவையேனும் **இரண்டிற்குச்** சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.

(i) உரோம் (ii) அட்ரியாட்டிக் கடல் (iii) டன்யூப் நதி
(iv) பாரிஸ் (v) ஜிப்ரொல்டர் நீரிணை (vi) ஆஸ்திரியா
(vii) நெதர்லாந்து (viii) கீல் கால்வாய்

(சரியாகக் குறித்துப் பெயரிட்ட ஒவ்வொன்றிற்கும் **01** புள்ளி; சுருக்கமான வரலாற்றுக் குறிப்பு ஒவ்வொன்றுக்கும் **05** புள்ளிகள்)

**2.** பின்வரும் துறைகளின் கீழ் பண்டைய உரோம கலாசாரத்தின் பிரதான பண்புகளைப் பரிசீலனை செய்க.
(i) கட்டடக்கலை
(ii) மத மாற்றங்கள் (14 புள்ளிகள்)

**3.** (i) பதினைந்தாம், பதினாறாம் நூற்றாண்டுகளில் ஐரோப்பாவில் நாடுகாண் பயணங்களுக்கு வழிவகுத்த பிரதான காரணிகளைப் பரிசீலனை செய்க. (08 புள்ளிகள்)
(ii) போர்த்துக்கல் **அல்லது** ஸ்பானியா ஒரு குடியேற்றப் பேரரசை உருவாக்கிய விதத்தினைப் பரிசீலனை செய்க. (06 புள்ளிகள்)

**4.** "புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்தம் பலவகைக் காரணங்களினால் உருவானது. அவற்றுள் சில அக்கால சமய, அரசியல், நிலைமைகளோடு நெருங்கிய வகையில் தொடர்பு கொண்டவை"
(i) புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்தம் ஆரம்பமான நாட்டின் பெயர் என்ன? (01 புள்ளிகள்)
(ii) புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்த இயக்கம் எந்த மத நிறுவனத்திற்கு எதிராகவும் தலைவருக்கு எதிராகவும் எழுச்சி பெற்றது? (02 புள்ளிகள்)
(iii) புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்த இயக்கத்தின் தலைவர்கள் **இருவரைப்** பெயரிடுக. (02 புள்ளிகள்)
(iv) புரட்டஸ்தாந்து மதச்சீர்திருத்தம் ஏற்படுவதற்கு ஏதுவான சமயம் மற்றும் அரசியல் காரணங்களின் ஒப்பீட்டுரீதியிலான முக்கியத்துவத்தை நுணுக்கமாக ஆராய்க. (09 புள்ளிகள்)

[பக். 8 ஐப் பார்க்க

**5.** (i) பிரான்சியப் புரட்சி ஏற்படுவதற்கு வழிவகுத்த பிரதான காரணங்களை ஆராய்க.
(ii) பிரான்சியப் புரட்சியினால் ஏற்பட்ட முக்கிய விளைவுகளைப் பரசீலனை செய்க.
(14 புள்ளிகள்)

**6.** (i) வியன்னா மாநாடு மேற்கொண்ட பிரதான தீர்மானங்களை விவரிக்குக.
(ii) நவீன ஐரோப்பிய வரலாற்றில் வியன்னா ஒப்பந்தத்தின் முக்கியத்துவத்தைப் பரிசீலனை செய்க.
(14 புள்ளிகள்)

**7.** "இத்தாலிய ஐக்கிய இயக்கம் பல தடைகளை எதிர்கொண்டாலும் இறுதியில் வெற்றியிலே முடிவுற்றது."
(i) 'இளம் இத்தாலி' என்ற அமைப்பினைத் தாபித்த இத்தாலியத் தலைவரைப் பெயரிடுக. (01 புள்ளிகள்)
(ii) இத்தாலியிலே எவ்வகையிலான அரசாங்கத்தை அமைப்பது அவரின் எதிர்பார்ப்பாக இருந்தது?
(01 புள்ளிகள்)
(iii) இத்தாலிய ஐக்கியத்திற்கு தலைமைத்துவம் வழங்கிய இத்தாலிய அரசின் பெயர் யாது?
(01 புள்ளிகள்)
(iv) 1815 - 1848 காலப்பகுதியில் இத்தாலியை ஐக்கியப்படுத்துவதற்கு எதிராக காணப்பட்ட தடைகளை சுருக்கமாகக் குறிப்பிடுக. (04 புள்ளிகள்)
(v) இத்தாலியை ஐக்கியப்படுத்துதலில் பிரதான கட்டங்களை எடுத்துக்காட்டுக. (07 புள்ளிகள்)

**8.** இரண்டாம் உலகப் போர் ஏற்படுவதற்கு வேர்செயில்ஸ் ஒப்பந்தம் எந்தளவிற்குக் காரணமாக இருந்தது?
(14 புள்ளிகள்)

**9.** பின்வரும் தலைப்புகளுள் எவையேனும் **இரண்டினது** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சிறுகுறிப்பு எழுதுக.
(i) கிரேக்க நகர அரசுகள்
(ii) 1688 - 89 ஆங்கிலப் புரட்சி
(iii) 1848 புரட்சிகள்
(iv) ரஷ்யாவில் போல்ஷ்விக் புரட்சியின் வெற்றி
(v) பனிப்போர்
(vi) ஐக்கிய நாடுகள் தாபனம் (ஒவ்வொன்றுக்கும் 07 புள்ளிகள்)

❊ ❊ ❊


Department of Examinations Sri Lanka

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

| | | |
|---|---|---|
| ඉතිහාසය II<br>வரலாறு II<br>History II | 25-B | T |

ප්‍රශ්න අංකය / வினா இல. / Question No. } 1

විභාග අංකය / சுட்டெண் / Index No. } ..............................



පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉතිහාසය II (I කොටස)
வரலாறு II (பகுதி I)
History II (Part I)

25-C T II

2019.08.23 / 0830 - 1140

පැය තුනයි
*மூன்று மணித்தியாலம்*
*Three hours*

අමතර කියවීම් කාලය - මිනිත්තු 10 යි
மேலதிக வாசிப்பு நேரம் - 10 நிமிடங்கள்
Additional Reading Time - 10 minutes

வினாப்பத்திரத்தை வாசித்து, வினாக்களைத் தெரிவுசெய்வதற்கும் விடை எழுதும்போது முன்னுரிமை வழங்கும் வினாக்களை ஒழுங்கமைத்துக் கொள்வதற்கும் மேலதிக வாசிப்பு நேரத்தைப் பயன்படுத்துக.

நவீன உலக வரலாறு - கி.பி 1500 கி.பி 1989 வரை

சுட்டெண்: ................................

**அறிவுறுத்தல்கள்:**

- இப் பகுதியில் **40** வினாக்கள் உள்ளன. எல்லா வினாக்களுக்கும் **இவ்வினாப்பத்திரத்திலேயே** விடை எழுதுக.
- ஒவ்வொரு வினா தொடர்பாகவும் **ஐந்து** தெரிவுகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** மட்டுமே சரியானது. வினாவின் சரியான விடையைத் தெரிவுசெய்து, தரப்பட்டுள்ள **அறிவுறுத்தல்களுக்கமைய உமது விடையைக் குறிப்பிடுக.**
- இப்பகுதிக்கு **40** புள்ளிகள் வழங்கப்படும்
- **இரண்டு** பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலங்களாகும்.** விடைகளை எழுதிய பின்னர், **I** இற்கான விடைகளை பகுதி, **II** இற்கான விடைத்தாள்களுடன் **இணைத்து ஒப்படைக்குக.**

## பகுதி I

- **1** தொடக்கம் **10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் ஐந்து பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** ஏதேனும் ஒரு காரணத்தால் மற்றவையோடு **பொருந்தாது.** அந்தப் பொருந்தாத பெயரைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தை** அடைப்புக்குறியினுள் எழுதுக.

**1.** (1) நைல் (2) குவாங்கோ (3) அமேசன்
(4) மிஸிஸிப்பி (5) கீல் (......)

**2.** (1) கியோடா (2) ஓசாக்கா (3) மக்காஓ
(4) நாகோயா (5) ரோக்கியோ (......)

**3.** (1) கியோற்றோ (2) மசாக்ஸியோ (3) பொட்டிசெல்லி
(4) மக்கியாவெல்லி (5) மைக்கல்அஞ்சலோ (......)

**4.** (1) ஜோன் ஹஸ் (2) மார்ட்டின் லூதர் (3) ஹூல்றிஜ் சுவிங்கிலி
(4) ஜோன் கல்வின் (5) இக்னேஷியஸ் லோயோலா (......)

**5.** (1) உரிமை முறி
(2) மனித உரிமைகள் பிரகடனம்
(3) வெள்ளை ஆஸ்திரேலியர் கொள்கை
(4) சர்வதேச மனித உரிமைகள் பிரகடனம்
(5) சிவில் மற்றும் அரசியல் உரிமைகளுக்கான சர்வதேச சமவாயம் (......)

**6.** (1) எகிப்து (2) சூடான் (3) நைஜீரியா
(4) கென்யா (5) இஸ்ரேல் (......)

[பக் 2 ஐப் பார்க்க

7. (1) பிரித்தானியா பொதுநலவாயம்
(2) சர்வதேச தொழிலாளர் தாபனம் (ILO)
(3) தென்கிழக்காசிய ஒப்பந்த தாபனம் (SEATO)
(4) மத்திய ஒப்பந்த தாபனம் (CENTO)
(5) தென்கிழக்காசிய நாடுகள் சங்கம் (ASEAN) (……)

8. (1) நேபாளம் (2) தமிழ்நாடு (3) கர்நாடகா
(4) ஆந்திரப் பிரதேஷ் (5) மகாராஷ்டிரா (……)

9. (1) கெய்ரோ மகாநாடு (2) பேர்லின் மகாநாடு (3) தெஹ்ரான் மகாநாடு
(4) யால்டா மகாநாடு (5) பொட்ஸ்டாம் மகாநாடு (……)

10. (1) மகாத்மா காந்தி (2) இராஜேந்திர பிரசாத்
(3) சர்வ பள்ளி இராதாகிருஷ்ணன் (4) நீலம் சஞ்சீவ ரெட்டி
(5) இராமசுவாமி வெங்கடராமன் (……)

● **11** தொடக்கம் **15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** சோடிப் பெயர்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ள பெயர்கள் / கூற்றுகள் ஒன்றுடன் ஒன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு அதன் **இலக்கத்தை அடைப்புக்குறியினுள்** எழுதுக.

11. (1) பூர்பன் - பிரான்ஸ்
(2) றோமனோவ் - பிரஷியா
(3) மிங் - சீனா
(4) கொன்பவுங் - பர்மா
(5) கனோவர் - இங்கிலாந்து (……)

12. (1) கோவா - போர்த்துக்கேயர்
(2) மணிலா - ஸ்பானியர்
(3) பட்டேவியா - ஒல்லாந்தர்
(4) கல்கத்தா - ஆங்கிலேயர்
(5) ஜகர்த்தா - பிரான்சியர் (……)

13. (1) கர்நாடகப் போர்கள் - இங்கிலாந்தும் நெதர்லாந்தும்
(2) ஏழாண்டுப் போர் - இங்கிலாந்தும் பிரான்சும்
(3) அபின் யுத்தம் - இங்கிலாந்தும் சீனாவும்
(4) கிரிமியன் யுத்தம் - ரஷ்யாவும் துருக்கியும்
(5) ஏழு கிழமைப் போர் - ஆஸ்திரியாவும் பிரஷ்யாவும் (……)

14. (1) பயங்கர ஆட்சி - பிரான்சியப் புரட்சி
(2) மொன்றோ கோட்பாடு - அமெரிக்கக் கண்டத்தின் விவகாரங்களில் ஐரோப்பிய நாடுகளின் தலையீடுகளுக்கு எதிரான ஐக்கிய அமெரிக்க அரசின் பிரகடனம்
(3) ஜேர்மனியை ஐக்கியப்படுத்தும் முயற்சி - பிராங்பேர்ட் அசெம்பிளி
(4) சுயநிர்ணயக் கோட்பாடு - வேர்செயில்ஸ் சமாதான உடன்படிக்கை
(5) புதிய பொருளாதாரக் கொள்கை - சுய பலப்படுத்துதலுக்கான சீனக் கொள்கை.(……)

15. (1) ஓர்லான்டோ - இத்தாலி
(2) லொயிட் ஜோர்ஜ் - பிரித்தானியா
(3) ஹிண்டன்பேர்க் - ஆஸ்திரியா
(4) கிளமென்சோ - பிரான்ஸ்
(5) வூட்றோ வில்சன் - ஐக்கிய அமெரிக்க அரசுகள் (……)

[பக் 3 ஐப் பார்க்க

● **16** தொடக்கம் **25** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள் / கூற்றுகள்/ திகதிகள் ஆகியவற்றின் தொகுதிகள் **X, Y** என்னும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள்/ கூற்றுகள் / திகதிகள் **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கில் **தரப்படவில்லை. Y**நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுக்கேற்ப சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களுள் **ஒன்று** சரியானதாகும். சரியான சேர்மானத்தின் **இலக்கத்தை அடைப்புக் குறியினுள்** எழுதுக.

**16.**

| X | Y |
|---|---|
| (i) கிரெம்ளின் | A உரோம் |
| (ii) நொட்ரே டாம் தேவாலயம் | B நியூயோர்க் |
| (iii) புனித பீற்றர் தேவாலயம் | C இலண்டன் |
| (iv) வெஸ்ற்மினிஸ்ரர் அரண்மனை | D மொஸ்கோ |
| (v) சுதந்திர தேவியின் சிலை | E பரிஸ் |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

**17.**

| X | Y |
|---|---|
| (i) புதிய உலகம் | A இங்கிலாந்து |
| (ii) இருண்ட கண்டம் | B அமெரிக்கக் கண்டம் |
| (iii) கடைக்கார இனத்தவர் | C இந்தியா |
| (iv) கிரீடத்தில் உள்ள வைரம் (Jewel in the crown) | D துருக்கி |
| (v) ஐரோப்பாவின் நோயாளி | E ஆபிரிக்கக் கண்டம் |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

**18.**

| X | Y |
|---|---|
| (i) தோமஸ் கொப்ஸ் | A பயன்பாட்டுவாதம் |
| (ii) மொன்டெஸ்கியூ | B யுத்தேப்பியன் சமதர்மம் |
| (iii) அடம்ஸ்மித் | C தலையிடாக் கொள்கை |
| (iv) ஜெரமி பெந்தம் | D தனிமுதன்மை அரசாங்கம் |
| (v) றொபேட் ஓவன் | E வலுவேறாக்கக் கோட்பாடு |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

**19.**

| X | Y |
|---|---|
| (i) நிக்கொலோ மக்கியவெல்லி | A டாஸ் கப்பிட்டல் |
| (ii) ஜீன் ஜக் ரூசோ | B வியத்தகு இந்தியா |
| (iii) கார்ள் மார்க்ஸ் | C இளவரசன் (The Prince) |
| (iv) A.L பஷாம் | D ஆசியாவும் மேனாட்டு ஆதிக்கமும் |
| (v) K.M. பணிக்கர் | E சமூக ஒப்பந்தம் |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

**20.**

| X | Y |
|---|---|
| (i) பறக்கும் தறிஓடம் | A றிச்சாட் ஆர்க்றைற் |
| (ii) நூற்கும் ஜெனி | B தோமஸ் நியூகமன் |
| (iii) நீர்ச்சட்டம் | C சாமுவேல் குறொம்ரன் |
| (iv) நூற்கும் மியூல் | D ஜேம்ஸ் ஹார்கிரிவ்ஸ் |
| (v) நீராவி யந்திரம் | E ஜோன் கே |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

**21.**

| X | Y |
|---|---|
| (i) தாய்லாந்து | A சியோல் |
| (ii) ஆப்கானிஸ்தான் | B கராச்சி |
| (iii) தென்கொரியா | C பாங்கொக் |
| (iv) பாகிஸ்தான் | D ஹனோய் |
| (v) வியற்னாம் | E காபுல் |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

| | X | | Y |
|---|---|---|---|
| **22.** | (i) பர்மா | A | எதியோப்பியா |
| | (ii) போர்மோஸா | B | பங்களாதேஷ் |
| | (iii) தங்கனிக்கா | C | தான்சானியா |
| | (iv) அபிசீனியா | D | மியன்மார் |
| | (v) கிழக்குப் பாகிஸ்தான் | E | தாய்வான் |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

| | X | | Y |
|---|---|---|---|
| **23.** | (i) வி.ஐ. லெனின் | A | ஒரு நாட்டில் சமதர்மம் |
| | (ii) லியோன் ட்றொட்ஸ்சி | B | கிளாஸ்நொஸ்ற் மற்றும் பிரெஸ்றோறிக்கா |
| | (iii) ஜோசேப் ஸ்ராலின் | C | சமாதான சகவாழ்வு |
| | (iv) நிகிதா குருஷேவ் | D | நிரந்தரப் புரட்சி |
| | (v) மிகையில் கோர்பசோவ் | E | பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

| | X | | Y |
|---|---|---|---|
| **24.** | (i) சர்வதேச சங்கம் | A | ஹேக் |
| | (ii) ஐக்கிய நாடுகள் தாபனம் (UNO) | B | வாஷிங்ரன் |
| | (iii) சர்வதேச நீதிமன்றம் (ICJ) | C | பரிஸ் |
| | (iv) ஐக்கிய நாடுகள் கல்வி விஞ்ஞான கலாசார தாபனம் (UNESCO) | D | ஜெனீவா |
| | (v) சர்வதேச நாணய நிதியம் (IMF) | E | நியுயோர்க் |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

| | X | | Y |
|---|---|---|---|
| **25.** | (i) மார்ஷல் டிட்டோ | A | கியுபா |
| | (ii) அப்துல் நாஸர் | B | யூகோசிலாவியா |
| | (iii) பிடல் கஸ்ட்ரோ | C | கொங்கோ |
| | (iv) பற்றிஸ் லுமும்பா | D | வடவியற்னாம் |
| | (v) ஹோ-ஷி-மின் | E | எகிப்து |

(1) BEACD (2) CEABD (3) DEACB (4) DECAB (5) EDACB (……)

- **26** தொடக்கம் **30** வரையுள்ள வினாக்களில் சரியான விடையைத் தெரிந்து அதன் **இலக்கத்தை எதிரேயுள்ள அடைப்புப் புள்ளிக்கோட்டில்** எழுதுக.

**26.** புவி ஈர்ப்புக் கோட்பாட்டை உருவாக்கியவர் யார்?
(1) நிக்கலாஸ் கோபர்னிக்ஸ் (2) ஜோகன்ஸ் கெப்ளர்
(3) கலிலியோ கலிலி (4) ஐசாக் நியூட்டன்
(5) பராசெல்ஸஸ் (……)

**27.** இங்கிலாந்தின் முதற் பிரதம அமைச்சராக கருதப்படுபவர் யார்?
(1) றொபேட் வால்போல் (2) வில்லியம் பீற்
(3) றொபேர்ட் லிவர்ப்பூல் (4) றொபேர்ட் பீல்
(5) வில்லியம் ஹஸ்கிசன் (……)

**28.** இந்தியாவில் இந்துசீர்திருத்த இயக்கமான ஆரிய சமாசத்தை தாபித்தவர் யார்?
(1) இராஜா ராம் மோகன் ராய் (2) ரபீந்திரநாத் தாகூர்
(3) கேசாப் சந்திர சென் (4) தயானந்த சரஸ்வதி
(5) லாலா ராஜ்பத் ராய் (……)

**29.** சீனாவின் தேசிய மக்கள் கட்சி அல்லது கோமிங்டாங் இனை தாபித்தவர் யார்?
(1) கான் யூ வெய் (2) யுவான் ஷிங் காய்
(3) சுன் யாற் சென் (4) வீ த ஷாஓ
(5) சியாங் கை ஷேக் (……)

**30.** நேசநாட்டுப் படைகளிடம் ஜப்பான் சரணடைந்தபோது ஜப்பானிய சக்கரவர்த்தியாக இருந்தவர் யார்?
(1) யோஷிகிற்றோ (2) ஹிறொகிற்றோ
(3) தோஜா ஹிடெக்கி (4) அக்கிஹித்தோ
(5) நறுஹித்தோ (……)

● **31** தொடக்கம் **35** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A)**, **(B)**, **(C)**, **(D)** என்னும் நான்கு தெரிவுகள் தரப்பட்டுள்ளன.
**(A)** யும் **(B)** யும் மட்டும் சரியாயின் ………………………… **1** எனவும்
**(A)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ………………………… **2** எனவும்
**(B)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ………………………… **3** எனவும்
**(C)** யும் **(D)** யும் மட்டும் சரியாயின் ………………………… **4** எனவும்
வேறு விடைகளின் எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரியாயின்……………… **5** எனவும்
**அடைப்புக் குறியினுள்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மட்டும் சரி | **(A)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(B)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(C)** யும் **(D)** யும் மட்டும் சரி | **வேறு விடைகளின்** எண்ணிக்கை அல்லது சேர்மானங்கள் சரி |

**31.** **கிழக்கில் ஒல்லாந்த குடியேற்ற பேரரசு தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது/எவை சரியானவை?**
(A) ஒல்லாந்த கிழக்கிந்திய வர்த்தகக் கம்பனியினாலே கிழக்கில் ஒல்லாந்தப் பேரரசு தாபிக்கப்பட்டது.
(B) இரண்டாம் உலகப் போரின்போது ஒல்லாந்தரின் கிழக்கிந்திய தீவுகள் ஜப்பானால் கைப்பற்றப்பட்டன.
(C) சுதந்திரத்திற்கான இந்தோனேசியாவின் தேசியப் போராட்டம் சுகர்னோ தலைமையில் முன்னெடுக்கப்பட்டது.
(D) 1949 இல் இந்தோனேசியா தன் சுதந்திரத்தை வென்றெடுத்தது. (……)

**32.** **கைத்தொழிற் புரட்சி தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது/எவை சரியானவை?**
(A) விவசாயப் பொருளாதாரத்திலிருந்து நகரப்புறத் தொழிற்சாலைகளில் இயந்திரங்கள் மூலமான உற்பத்தியை அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரம் வரை ஏற்பட்ட மாற்றமே தொழிற்புரட்சி என அழைக்கப்படுகிறது.
(B) கைத்தொழிற் புரட்சி பிரான்சில் ஆரம்பித்தது.
(C) கைத்தொழிற் புரட்சி நவ பேரரசு வாதத்திற்கு வழி வகுத்தது.
(D) கைத்தொழிற் புரட்சி மத்திய வகுப்பினருடைய எழுச்சியைத் தடைசெய்தது. (……)

**33.** **இத்தாலியின் ஐக்கியம் தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது/எவை சரியானவை?**
(A) பீட்மன்ட்- சார்டீனியாவின் தலைமைத்துவத்தின் கீழ் இத்தாலி ஐக்கியப்படுத்தப்பட்டது.
(B) இத்தாலிய ஐக்கியத்தின் பிரதான சிற்பியாக கமிலியோ கவூர் விளங்கினார்.
(C) பாப்பாண்டவரின் ஆசீர்வாதத்துடன் இத்தாலி ஐக்கியப்பட்டது.
(D) இத்தாலியின் முதற் பிரதம அமைச்சராக மாசினி நியமிக்கப்பட்டார். (……)

[பக் 6 ஐப் பார்க்க

**34.** **ஜேர்மனியில் நாஸிஸம் தொடர்பான பின்வரும் கூற்றுகளில் எது /எவை சரியானவை?**
(A) நாஸிஸத்தின் தோற்றத்திற்குப் பிரதான காரணமாக வைமார் குடியரசின் தோல்வி காணப்பட்டது.
(B) ஹிட்லர் நாஸிகளின் தலைவராக எழுச்சி பெற்றார்.
(C) நாஸிகளின் ஆட்சியில் ஜேர்மனி ஒரு கட்சி ஆட்சியுள்ள அரசாக மாறியது.
(D) நாஸி ஆட்சியாளர் ஆக்கிரமிப்பு தன்மை கொண்ட வெளிநாட்டுக் கொள்கையைப் பின்பற்றினார். (……)

**35.** **கானா குறித்த பின்வரும் கூற்றுகளில் எது /எவை சரியானவை?**
(A) கானா பிரான்சிய குடியேற்றமாக இருந்தது.
(B) கானாவின் நிலப்பகுதியை ஐரோப்பியர்கள் கோல்ட் கோஸ்ற் என அழைத்தனர்
(C) குவாமே நிக்குறுமா தலைமையின் கீழ்1957 இல் கானா சுதந்திரக் குடியரசாக மாறியது.
(D) கானா பொதுநலவாயத்தில் ஒரு அங்கத்துவ நாடு அன்று. (……)

● **36** தொடக்கம் **40**வரையுள்ள வினாக்களில் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் தரப்பட்டுள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிந்து அதன் **இலக்கத்தை** அடைப்புக் குறியினுள் எழுதுக.

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| 1 | சரியானது | பிழையானது |
| 2 | சரியானது | சரியானது |
| 3 | பிழையானது | பிழையானது |
| 4 | பிழையானது | சரியானது |
| 5 | சரியானது | சரியானதும் **முதலாம்** கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| **36.** | 1688-89 ஆங்கிலப் புரட்சியின் பின்னர் உடனடியாகவே முதலாம் சார்ள்ஸ் சிரச்சேதம் செய்யப்பட்டார். | பிரெஞ்சுப் புரட்சியின்போது 1793 இல் 16ஆம் லூயி கிலற்றின் கருவியினால் சிரச்சேதம் செய்யப்பட்டார். | (………) |
| **37.** | ஜேர்மனியின் அரசியல் ஐக்கியத்திற்கு பொருளாதார அத்திவாரத்தை சோல்வறைன் வழங்கியது | ஜேர்மனியின் ஐக்கியம் பிரசியாவின் தலைமைத்துவத்தின் கீழ் அடையப்பட்டது. | (………) |
| **38.** | பத்தொன்பதாம் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் இந்து சீனத்தில் பிரான்ஸ் தனது ஆதிக்கத்தைத் தாபித்தது. | 1898 இல் ஸ்பானிய அமெரிக்க போரின் பின் உடனடியாகவே பிலிப்பைன் சுதந்திர அரசாக மாறியது. | (………) |
| **39.** | 1868இல் ஜப்பானில் தொகாவா சோகுனேற்றை தூக்கி எறிந்த மேஜு புரட்சி புனருத்தாரணம் ஜப்பானின் நவீன வரலாற்றில் ஒரு முக்கிய மாற்றத்தின் குறியீடாக உள்ளது. | மேஜிபுரட்சி (புனருத்தாரணம்) டயம்போ, சமுறாய் மானியமுறைமையினைக் குலைத்ததுடன் ஜப்பானில் இராணுவ, அரசியல், சமூக மற்றும் பொருளாதாரத் துறைகளில் நவீன மயமாக்கத்தின் முன்னேற்றத்திற்கு அத்திவாரமிட்டது. | (………) |
| **40.** | லீ குவான் யூ மலேசியாவின் முதற் பிரதம அமைச்சர் ஆவார். | அல்ஜீரியா, 1962 வரை பிரித்தானியாவின் ஆதிக்கத்தில் இருந்தது. | (………) |

* *

පැරණි නිර්දේශය/ பழைய பாடத்திட்டம்/ Old Syllabus

OLD



අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

ඉතිහාසය II (II කොටස)
வரலாறு II (பகுதி II)
History II (Part II)

25-C T II

**நவீன உலக வரலாறு - கி.பி. 1500 முதல் 1989 வரை**

**அறிவுறுத்தல்கள்:**

✳ **முதலாம்** வினாவிற்கும் வேறு **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(**முதலாம்** வினாவுக்கு விடையளிப்பதற்கு **உலகப் புறவுருவப்** படம் வழங்கப்படும்)

## பகுதி II

**1.** உமக்கு வழங்கப்பட்டுள்ள புறவுருவப் படத்தில் கீழே தரப்பட்டுள்ள **எல்லா இடங்களையும் குறித்துப் பெயரிட்டு** அவற்றுள் எவையேனும் **இரண்டுக்குச்** சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.

(i) நைல் நதி (ii) மத்தியதரைக்கடல் (iii) சிசிலி (iv) இஸ்தான்புல்
(v) பீஜிங் (vi) நியுயோர்க் (vii) ஆப்கானிஸ்தான் (viii) பனாமாக் கால்வாய்

*(சரியாகக் குறித்துப் பெயரிட்ட ஒவ்வொன்றுக்கும் 01 புள்ளி. ஒவ்வொரு சுருக்கமான குறிப்புக்கும் 05 புள்ளிகள்)*

**2.** (i) பதினைந்தாம், பதினாறாம் நூற்றாண்டுகளில் ஐரோப்பாவின் ஆதிக்க விரிவாக்கத்துக்கு வழிகோலிய பொருளாதார மற்றும் சமயக் காரணிகளைப் பகுப்பாய்வு செய்க.

(ii) போர்த்துக்கல் **அல்லது** ஸ்பானியா குடியேற்றப்பேரரசை உருவாக்கிய விதத்தினைப் பரிசீலனை செய்க. (14 புள்ளிகள்)

**3.** "பிரித்தானியா பின்பற்றிய குடியேற்றவாதக் கொள்கையின் விளைவாகவே அமெரிக்க சுதந்திரப் போர் ஆரம்பித்தது."

(i) வட அமெரிக்காவில் தரை இறங்கிய ஆரம்பகால ஆங்கில நாடுகாண்பயணி ஒருவரின் பெயர் குறிப்பிடுக. (01 புள்ளிகள்)

(ii) வட அமெரிக்காவில் ஏற்படுத்தப்பட்ட **நான்கு** ஆங்கிலக் குடியேற்றங்களின் பெயர்கள் தருக. (02 புள்ளிகள்)

(iii) வட அமெரிக்காவிற்கு ஆங்கிலேயர் குடிபெயர்வதற்கு வழிவகுத்த காரணிகள் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)

(iv) அமெரிக்க சுதந்திரப் போருக்கு பிரித்தானியா குடியேற்றவாதக் கொள்கை வழிவகுத்த விதத்தினைப் பரிசீலனை செய்க. (08 புள்ளிகள்)

**4.** (i) முதலாம் உலகப் போருக்கு முன்பாக ஐரோப்பா இரண்டு இராணுவ முகாம்களாகப் பிரிவுபட்ட விதத்தைப் பரிசீலனை செய்க. (05 புள்ளிகள்)

(ii) ஐரோப்பா இரண்டு இராணுவ முகாம்களாகப் பிரிந்திருந்தமை முதலாம் உலகப் போருக்கு எந்தளவிற்கு காரணமாக அமைந்தது? (09 புள்ளிகள்)

**5.** (i) 1917 ருஷியப் புரட்சியின் பின்னணியினைப் பகுப்பாய்வு செய்க.

(ii) ரஷ்யாவில் போல்ஷ்விக்கினர் அதிகாரத்தைக் கைப்பற்றிய விதத்தினைப் பரிசீலனை செய்க. (14 புள்ளிகள்)

[பக் 8 ஐப் பார்க்க

6. அண்மைக்கால உலக வரலாற்றில் இரண்டாம் உலகப் போர் ஒரு திருப்பு முனையை குறித்து நிற்கின்றது." இரண்டாம் உலகப் போரின் விளைவுகளை கொண்டு இக்கூற்றினை ஆராய்க. (14 புள்ளிகள்)

7. சீனாவில் பொதுவுடமைப் புரட்சியானது குறிப்பிடத்தக்க பொருளாதார மாற்றத்தை ஏற்படுத்தியது.
   (i) சீனப் புரட்சியை வழிநடத்திய பொதுவுடமைத் தலைவரின் பெயர் குறிப்பிடுக. (01 புள்ளிகள்)
   (ii) பொதுவுடைமை வாதிகள் எதிர்த்துப் போராடிய ஆட்சியையும் அதன் தலைவரினதும் பெயர்கள் குறிப்பிடுக. (02 புள்ளிகள்)
   (iii) பொதுவுடைமை வாதிகளின் வெற்றிக்கு வழிவகுத்த காரணிகள் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிடுக. (03 புள்ளிகள்)
   (iv) 1976 வரை சீனாவை அபிவிருத்தி செய்வதற்கு பொதுவுடைமைவாதிகள் பின்பற்றிய பொருளாதாரக் கொள்கைகளை நுணுகி ஆராய்க. (08 புள்ளிகள்)

8. (i) பனிப்போர் என்பதால் கருதப்படுவது யாது என்பதனை வரைவிலக்கணப்படுத்துக. (05 புள்ளிகள்)
   (ii) கியூபா ஏவுகணை நெருக்கடி வரையிலான காலப்பகுதியில் பனிப்போர் வளர்ச்சி அடைந்த விதத்தினைப் பரிசீலனை செய்க. (09 புள்ளிகள்)

9. பின்வருவனவற்றில் எவையேனும் **இரண்டினது** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சிறு குறிப்பு எழுதுக.
   (i) மறுமலர்ச்சிக்கால கலை, கட்டிடக்கலை
   (ii) மகோன்னதப் புரட்சி
   (iii) இஸ்ரேல் அரசின் தோற்றம்
   (iv) ஐக்கியநாடுகள் சபையின் நோக்கங்களும், அமைப்பும்
   (v) மார்ஷல் திட்டம்
   (vi) சோவியத் யூனியனின் வீழ்ச்சி

(ஒவ்வொன்றிற்கும் 07 புள்ளிகள்)

* * *

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2019 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2019 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2019

| | | | |
|---|---|---|---|
| ඉතිහාසය | II | 25-C | T |
| வரலாறு | II | | |
| History | II | | |

ප්‍රශ්න අංකය / வினா இல. / Question No. 1

විභාග අංකය / சுட்டெண் / Index No. ..............................

